# தமிழ்த்தாயின் தவப்புதல்வனுக்கு

## எட்டையபுரத்தில் ஞாபகார்த்தம்


# ஜனசக்தி

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி தமிழ்நாட்டுக் கமிட்டியின் வாரப் பத்திரிகை

மலர் 3. இதழ் 37. | புதன்கிழமை 13—6—45 | விலை 2 அணா


இது பாரதியுகம். "அச்சமும் பேடிமையும் அடிமைச் சிறுமதியும்" கொண்ட ஊமை ஜனங்களாயிருந்த தமிழர்களை, அன்னிய மாயத்தின் கைப்பாவைகளாய்க் கிடந்த தமிழ் மக்களைத் தட்டி எழுப்பினார் பாரதியார். தேசியப் போராட்டத்தில் திரட்டினார்.

"அண்டஞ் சிதறினாலும் அஞ்ச மாட்டோம்" என்று முழங்கினார்; அச்சப்பேய் அலறி ஓடியது.

"எங்கள் பாரத தேசமென்று தோள் கொட்டுவோம்" என்று ஆனந்தக் கூத்தாடினார். தமிழன் தேசபக்தியில் ஏறியிருந்த துரு மறைந்தது.

"சுற்றி நில்லாதே போ-பகையே துள்ளி வருகுது வேல்" என்று எச்சரித்தார் தமிழ் நாட்டின் சிம்மம். தேசிய இயக்கமென்றவேல் துள்ளி வருவதைக் கண்டு பகைவன் பதைபதைத்தான்.

"ஒன்றுபட்டா லுண்டு வாழ்வு" என்று உபதேசித்தார். பேத புத்தி புறமுதுகு காட்டி ஓடியது.

பாரதியின் கவிகள் தமிழ்மக்களை தட்டி எழுப்பிவிட்டன. நாம் சுதந்திரப்போரில் குதித்தோம்; துன்புற்றோம்; தியாகம் செய்தோம்; உதிரம் சிந்தினோம்; உயிர் நீத்தோம்.

அகில இந்தியாவும் தமிழர்களின் தேசபக்தியையும் தியாகத்தையும் போற்றுகிறது. அதற்கு மூலகாரணமான பாரதியைப் போற்றுகிறது. தேசிய இயக்கத்தின் தந்தையாகிய மகாத்மா காந்தியே பாரதி ஞாபகார்த்தபிரயத்தனத்துக்கு ஆசி கூறினார். தமிழில் ஆசி கூறினார். கவியரசி ஸ்ரீமதி ஸரோஜினி "தேசியமகா கவிக்குநான் பரமபக்தியுடன் என் காணிக்கையை சமர்ப்பிக்கிறேன்" என்று செய்தி அனுப்பினார்.

"பாரதி கீதங்கள் தேசபக்தி, சுயமதிப்பு, சுதந்[illegible] முதலியவற்றை போதிக்கின்றன" என்று புலாபாய் தேசாய் போற்றிப் புகழ்ந்தார்.

தமிழ்நாட்டின் கவிச் சக்கரவர்த்தி பாரதியார் தேசிய மகாகவி, இந்திய மக்களின் இணையற்ற சம்பத்து.

* * *

### வறுமை வாய்ப்பட்டார்

இலியத் என்ற மகாகாவியத்தை எழுதிய ஹோமர் என்ற கிரேக்க கவியை அந்நாட்டு மக்கள் பூஜிக்கிறார்கள். பூவுலகில் அவர் வாழ்ந்த சமயத்தில், பிச்சை எடுத்துக் காலம் கழித்தார் அவர்! ஏனென்று கேட்பாரின்றி இறந்தார்; இறந்த பின் சிறந்தார்.

"தன்னறிவே பொன்னறிவு" என்று ஏதென்ஸ் வீதிகளில் வீர முழக்கம் செய்தார் ஸாக்ரடீஸ். அன்று [illegible]க்க மக்கள் அவரை ஏளனம் செய்தனர்; வெறுத்தனர்; தூற்றினர். (அ)நியாயமன்றம் அவருக்கு விஷம் கொடுத்துக் கொன்றது.

பாரதியாரும் வறுமை என்ற விஷத்துக்கு பலியானார். ஆனால், இன்று அவர் தமிழ் மக்களின் இதயங்களில் கொலுவீற்றிருக்கிறார்.

* * *

### எட்டையபுரம்

பாரதியாரின் ஜனன ஸ்தலம் எட்டையபுரம் தாய் தந்தையரை இழந்தபின், திக்கு தெரியாமல், காசிக்குச் சென்று உறவினருடன் வசித்தார்.

எட்டையபுரம் ராஜா அவரை அங்கிருந்து வரவழைத்தார். சமஸ்

**கலைப்பித்தன்**

தானத்திலேயே இருக்கும்படி கேட்டுக்கொண்டார்.

ஆனால் முடி மன்னனுக்கும் கவி மன்னனுக்கும் ஒத்துக் கொள்ளவில்லை. நாடாளும் ராஜாவுக்கும் ஜனங்களின் கவிக்கும் அபிப்பிராய பேதம் ஏற்பட்டது. பாரதியார் எட்டையபுரத்தைவிட்டுவெளியேறினார்.

இன்று, அதே எட்டையபுரத்தில் பாரதி ஞாபகார்த்தநிலையம் அமைக்கப்படுகிறது! எட்டைய புரத்தில் பிறந்தவர்களின் முதல் முயற்சியாலேயே—பாரதி இலக்கியமன்றத்தின் சிரத்தையினாலேயே, பாரதி நினைவுக்கு ஒரு ஸ்தூல சின்னம் அமைக்கப்படுகிறது. எட்டையபுரம் ராஜாவே இதில் முன் கை எடுத்திருக்கிறார். காலம் மாறிவிட்டது. தமிழன் விழிப்படைந்துவிட்டான்! ராஜா முதல் தொழிலாளி வரையில் எல்லோரும் பாரதி ஆர்வம்கொண்டுவிட்டார்கள். தனிப்பெரும் ஒற்றுமைச் சின்னமாக பாரதியார் பரிணமித்துவிட்டார்.

* * *

### தமிழ் வாழ்க!

பாரதியார் தமிழர். செந்தமிழ் நாட்டின் வீர பரம்பரையும், பண்டைய பண்பாடும் உணர்ந்தார், அதில் பெருமைகொண்டார். வருங்காலத்தில் தமிழன் மேன்மையடைவானென்பது அவரது அசைக்க முடியாத நம்பிக்கை.

"செந்தமிழ் நாடெனும்
போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது
காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற
பேச்சினிலே—ஒரு
சக்தி பிறக்குது
மூச்சினிலே"

என்று பாடிப் பூரித்தார்.

"யாமறிந்த மொழிகளிலே
தமிழ்மொழி போல்
இனிதாவதெங்கும் காணோம்"

அப்படியிருக்க

"ஊமையாய்ச் செவிடர்களாய்க்
குருடர்களாய் வாழ்கின்றோம்"

என்று நம் பேதமையை இடித்துக்காட்டினார்.

"சேமமுற வேண்டு
மெனில்
தெருவெல்லாம்
தமிழ் முழக்கம்
செழிக்க
செய்வீர்"

என்று ஆக்ஞாபித்தார்.

"சென்றிடுவீரெட்டுத்
திக்கும்—கலைச்செல்வங்
கள் யாவுங்கொணர்ந்
திங்கு சேர்ப்பீர்!"

என்று உத்திரவிட்டார்.

### தொழில் பெருக

தமிழ் மொழியும் தமிழ்க் கலையும் செழிப்பதுடன், தமிழ்நாடும் உயர வேண்டுமென்று அவர் கனாக் கண்டார்.

"பட்டினிலாடையும்
பஞ்சிலுடையும்
பண்ணி மலைகளென
வீதி குவிப்போம்"

"ஆயுதம் செய்வோம்,
நல்ல காகிதம் செய்
வோம்
ஆலைகள் வைப்போம்,
கல்விச்சாலைகள்
வைப்போம்"

"நடையும் பறப்புமுணர்
வண்டிகள் செய்வோம்
ஞாலம் நடுங்கவரும்
கப்பல்கள் செய்
வோம்"

"உலகத்தொழிலனைத்
தும்
உவந்து செய்வோம்"

என்று வருங்கால தமிழகத்தைப் பற்றிக் கூறினார்.

இந்த நவயுக தமிழகத்தின் தச்சன்—படைப்புக் "கடவுள்"—தொழிலாளி யல்லவா? அதனால்தான், தொழிலாளியைப் போற்றுகிறார்.

"விண்ணினின் றெம்மை
வானவர் காப்பர்
மேவிப்பார் மிசை
காப்பவர் நீரே"

"பெரும் புகழ்நுமக்கே
யிசைக்கின்றேன்
பிரமதேவன் கலையிங்கு நீரே"

என்று தொழிலாளிக்கு பாமாலை சூட்டினார்.

### புதுயுகக் கவி

அவர் கனவு கண்ட புதுயுகம் ருஷ்ய நாட்டில் உதயமாயிற்று. உடனே அதற்கு பல்லாண்டு கூறினார். அதில் பிறந்த ஆவேசம்தான் "பாரத சமுதாயம் வாழ்கவே" என்ற கீதத்தின் தாய். கடற்கரைக் கூட்டத்தில் பாரதியார் பாடிய கடைசி கீதம் அந்த சமதர்ம பாட்டு தான்.

பாரதி சேவை பயன் தருகிறது. தமிழ்நாடு புத்துயிர் பெற்றுப் புதுகளையுடன் பிரகாசிக்கிறது. தற்கால தேசிய, கலாச்சார, சீர்திருத்த பொதுஜன, பொதுவுடமை இயக்கங்களே அதற்கு சாட்சி கூறும்.

கல்கியின் முயற்சி அதை திருஷ்டாந்தப்படுத்திவிட்டது. சங்கமில்லை, தொண்டரில்லை, தலைவரில்லை, பாரதி நிதிக்கு பணம் வேண்டுமென்று பத்திரிகை வாயிலாகத் தெரிவித்தார். அவ்வளவுதான். கேட்டது 5000; குவிந்தது 42,000.

கல்கியின் முயற்சிக்கு தமிழ் நாட்டுத் தலைவரே மகுடம் சூட்டிவிட்டார்.

* * *

### பொழுது புலர்ந்தது

ஜூன் மாதம் மூன்றும் தேதி தமிழ் நாட்டின் தேசிய சரித்திரத்தில் பொன் னெழுத்துக்களில் பொறிக்கப்படும்.

அன்று அதிகாலையில், எட்டையபுரம் ராஜா கல்லெடுத்துக் கொடுக்க தமிழ் நாட்டுத் தலைவர் ராஜாஜி பாரதி நிலயத்துக்கு அஸ்திவாரம் அமைத்தார். அது பாரதி ஞாபகச் சின்னத்தின் அஸ்திவாரம் மாத்திரமல்ல, பாரதியார் கண்ட லட்சியத் தமிழகம் ஏற்பட அதன் தலைவர் நட்ட அஸ்திவாரக் கல் அது. பாரதி நிலயத்துடன், தமிழன் அரசியல் கோயிலும் எழும். சுதந்திர இந்தியாவில் தமிழன் தன்னரசு புரிவான்.

உஷையின் பின்னால் உதய ஞாயிறு உதித்தான். மூவாயிரம் பேர் மேடையினருகில் கூட்டம். கான சரஸ்வதி பட்டம்மாள் பூபாள ராகத்தில் "பொழுது புலர்ந்தது" என்ற பாரதி பாட்டை ஆரம்பித்தார். என் மெய் சிலிர்த்தது. இதயம் விரிந்தது. புளகாங்கிதமடை[illegible]தேன்.

காலை சிற்றுண்டியையும் மறந்தேன். 12½ மணி வரை இருந்த இடத்தைவிட்டுப் பெயரவில்லை. தலைவர்கள் பேசினார்கள். பாரதியின் பால்ய நண்பர்; சோமசுந்தரபாரதி தமிழறிஞர் டி. கே. சிதம்பரநாத முதலியார், நாமக்கல் கவிஞர், தேசபக்தர்கள் ராஜன், அண்ணாமலைப் பிள்ளை, சுப்பராயன் இன்னும் பலர் சொற்பொழிவாற்றினார்கள்.

ராஜாஜி பேச எழுந்தார். பின்னால் பார்த்தேன். அப்பப்ப! பத்தாயிரம் மக்கள் குழுமியிருந்தனர். சென்னையிலல்ல, பொன்மலையிலல்ல, மதுரையிலுமல்ல, குக்கிராமமாகிய எட்டையபுரத்தில்!

"பாரதியாருக்கு நாம் செய்யக் கூடிய மகத்தான சேவை ஒன்று உண்டு. ஒவ்வொரு தமிழனும் பாரதி பாட்டை நன்ருகப் படித்து அநுபவிக்க வேண்டும். 'என்னுடைய பாரதி' என்று ஒவ்வொரு தமிழனும் தலை நிமிர்ந்து பெருமையுடன் சொல்ல வேண்டும். ஷேக்ஸ்பியர் பிறந்த ஸ்டிராப்போர்டு-ஆன்-எவன் என்பதைப் போல எட்டையபுரம் அழியாப் புகழ்பெற்று விட்டது" என்று ராஜாஜி குறிப்பிட்டார். இதைக் கேட்க, என் மனம் எங்கெங்கோ பறந்து சென்றது. தமிழ் நாட்டின் கலாக்ஷேத்திரமாக எட்டையபுரம் பெயரும் புகழும் பெற்றுத் திகழுங்காலம் சமீபித்து விட்டதென்ற உணர்ச்சி எனக் கேற்பட்டது.

* * *

பாரதி விழா வருஷா வருஷம்

(7-ம் பக்கம் பார்க்க)

உள்ளே எள் போட்டால் எள் விழாது. அதனால் வெளியே நிற்கின்றனர்.

பாரதி பெண்களும், பேத்தியும் பாரதி கீதத்தைப் பாடுகிறார்கள். ராஜாஜிக்கு பக்கத்தில் நிற்பதுதான் கல்கி.

இதுதான் இனி எழப்போகும் பாரதி நிலயம்

பாரதிக்கு காணிக்கை செலுத்த வந்த தமிழர்களில், ஒரு பகுதி.

## சமாதான ஸ்தாபனம்

# பிரிஸ்கோவில் ஏற்பட்ட உடன்பாடு

## அபிப்பிராயபேதம் எப்படி ஏற்பட்டது?

பிரிஸ்கோ மகாநாடு கூடின சமயத்தில்தான் ஐரோப்பாவில் யுத்தம் முடிந்தது; அதன் பின்னர் பிரிட்டனில் கூட்டுமந்திரி சபை கலைக்கப்பட்டது; ஸிரியா லெபனனில் தகராறு ஏற்பட்டது. ஆதலால் சமாதான சாஸனத்தை வரையறுக்கவேண்டிய அதன் முக்கிய வேலையின்மீது உலக மக்கள் போதிய கவனத்தைச் செலுத்தவில்லை.

"பிரிஸ்கோ மகாநாடு வெறும் கேலிக்கூத்து, அதன் பயனுக நிரந்தர சமாதான ஸ்தாபனம் ஏற்படாது, வல்லரசுகளுக்குள்ளே வித்தியாசங்கள் அதிகம், மகாநாடு ஒரு விதமான முடிவும் செய்யாமல் கலைந்து போய்விடும்" என்று பலர் எண்ணுவதற்கு ஆரம்பித்துவிட்டனர்.

### வித்தியாசம் எந்த விஷயத்தில் ?

சமீபகாலத்தில் ரஷ்யாவுக்கும் மற்ற நாடுகளுக்கும் ஸ்தாபன அமைப்புபற்றியே அபிப்பிராய பேதங்கள் ஏற்பட்டுவிட்டன. அதில் இரண்டு விஷயங்கள் முக்கியமானவை. ஒன்று காலனிகளைப் பற்றியது, ரஷ்யா காலனிகளுக்கு சுதந்திரம் வழங்க வேண்டுமென்பதை ஸ்பஷ்டமாக சர்வதேச சாஸனத்தில் குறிப்பிடவேண்டு மென்றது; பிரிட்டனும் அமெரிக்காவும் இதை பரிபூர்ணமாக ஒப்புக்கொள்ளத் தயாராயில்லை.

### 'ரத்து' அதிகாரம்

இரண்டாவது விஷயம் 'ரத்து' அதிகாரம் பற்றியது. ஐந்து பெரிய அரசுகளில் ஏதாவது ஒன்று இஷ்டப்பட்டால் ஒரு தகராறு பந்தோபஸ்து ஸ்தாபனத்தின்முன்கொண்டு வராமல் 'ரத்து' செய்யும் அதிகாரம் இருக்கவேண்டுமென்றதுசோவியத். மற்ற நாடுகள் இதை ஆக்ஷேபித்தன. சிறியநாடுகள் "இது பெரிய நாடுகள் தாங்கள் விரும்பினல் ஒரு தகராறை கவனிக்காமல் இருப்பதற்கு அடிகோலும் முயற்சி" என்றன. பிரிட்டனும் அமெரிக்காவும் பாரபக்ஷமற்ற நாடுகளைப்போல் பாவனைசெய்து நடவடிக்கையைப் பொருத்தவரையில் ஐந்து பெரிய நாடுகளும் ஒரே முகமாக ஓட் செய்யவேண்டுமே, ஒரு தகராறு என்ன என்பதைப் பற்றி பூர்வாங்க விசாரணை செய்வதை எந்தப் பெரியநாடும் தடைபடுத்தும்படியான அதிகாரத்தைப் பெறக்கூடாது என்றன.

**C. S. சுப்ரமண்யம்**

சமாதான ஸ்தாபன அமைப்பைப்பற்றி சில விஷயங்களை இங்கே கூறவேண்டியது அவசியம். டம்பர்ட்டன் ஓக்ஸ் என்ற இடத்தில் முதன்முதலாக சமாதானத்தைக் காக்க ஒரு சர்வதேச ஸ்தாபனம் அவசியம், அதன் அமைப்பு எப்படி இருக்கவேண்டுமென்பதுபற்றி ஒரு யாதாஸ்து தயாரிக்கப்பட்டது. யால்டாவில் நடந்த மூவர் மகாநாட்டில் அந்த திட்டம் குறிப்பிடப்பட்டது. அச்சமயம் ஓட் செய்யும் முறைபற்றி ஏகோபித்த முடிவுக்கு வரவில்லையென்றும், பிரிஸ்கோவில் இப் பிரச்னைகளனைத்தையும் தீர்த்து, ஒரு சமாதான சாஸனம் தயாரிக்கப்படவேண்டும் என்றும் யால்டா பிர்கடனம் கூறிற்று.

### டம்பர்ட்டன் ஓக்ஸ் திட்டம்

டம்பர்டடன் ஓக்ஸ் திட்டத்தில் சர்வதேச சமாதான அமைப்பு பின்வருமாறு:

(i) பொது அஸெம்பிளி-இதில் சமாதான சாஸனத்தை ஒப்புக்கொள்ளும் எல்லா தேசங்களுக்கும் இடமுண்டு.

(ii) பந்தோபஸ்து ஸ்தாபனம். இதில் பெரிய வல்லரசுகள் 5க்கும் முக்கிய ஸ்தானம் உண்டு. மற்ற 6 ஸ்தானங்களுக்கு சிறிய நாடுகள் 2 வருஷங்களுக்கு ஒருமுறை பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கலாம்.

(iii) சர்வதேச நீதிமன்றம்.

(iv) சர்வதேச ஸ்தாபன காரியாலயம்.

பந்தோபஸ்து ஸ்தாபனத்துக்குத்தான் பெரிய பொறுப்பு, அதுதான் தகராறுகள் ஏற்பட்டவுடன் அதைக் கவனித்து, நடவடிக்கை எடுத்துக் கொள்வதை நிர்ணயிக்க வேண்டியது.

### சோவியத் கூறுவது என்ன ?

சமாதானம் உண்மையில் நிலைத்திருக்கவேண்டுமென்றல் பெரிய வல்லரசுகளுக்கிடையே ஒருமுகமான அபிப்பிராயம் வேண்டும். ஆதலால் பிரச்னைகளை விவாதக்க வேண்டும் என்ற விஷயத்திலும், நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும் என்ற விஷயத்திலும், இந்த 5 பெரியநாடுகளும் ஒரேவிதமான முடிவுக்கு வரவேண்டும் என்பது சோவியத் யூனியனுடைய வாதம்.

சோவியத் யூனியன் கூறுகிறபடி பெரிய வல்லரசுகளுக்கு அதிகாரம் கொடுத்தால், அவற்றுள் ஏதாவது ஒரு வல்லரசு விரும்பினல் பிரச்னை பந்தோபஸ்து கவுன்ஸிலின் முன் வராதபடி தடுத்துவிடலாம் என்று பலர் கூறுகிறர்கள். விவாதத்தின் பின் நடவடிக்கை எடுத்துக்கொள்ளும் விஷயத்தில்தான் ஏதாவது ஒரு வல்லரசு ஆக்ஷேபித்தால் நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடியாதே என்கிறர்கள். ஒரு வல்லரசு

(7-ம் பக்கம் பார்க்க)

## காங்கிரஸூம் கம்யூனிஸ்டுகளும்

## "விலக்கிவைப்பது விபரீதமாகும்"

**—ஸையத் மாமூத்.**

"கம்யூனிஸ்டுகளுடன் நமக்கு முக்காலே மூன்று வீசம் அபிப்பிராய ஒற்றுமை இருக்கிறது. அப்படியிருக்க அவர்களுடன் நாம் ஏன் சேர்ந்து வேலை செய்யக்கூடாது?" என்று காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினர் டாக்டர் ஸையத் மகமூத் சென்னை தியாகராயநகர் இளைஞர் கூட்டத்தில் குறிப்பிட்டார்.

"கம்யூனிஸ்டுகள் உயர்ந்த ஸ்தாபன அமைப்பு உடையவர்கள். அவர்களிடம் உங்களுக்கு அபிப்பிராயபேதமிருக்கலாம். அதனல் கம்யூனிஸ்டுகள் தேசபக்தர்களல்ல என்ற தகாத வார்த்தை சொல்லலாமா? 10 ஆயிரம் கம்யூனிஸ்டுகளை துரோகிகளென்று சொன்னல், நீங்கள் முன்னேற முடியாது. விநாச காலத்தில்தான் இப்படிப்பட்ட விபரீதபுத்தி உங்களுக்குத் தோன்றும்.

"சென்ற காலத்தில் கம்யூனிஸ்டுகள் செய்திருப்பதையோ; தற்காலத்தில் அவர்கள் ஆற்றும் தொண்டையோ, நாளைக்கு அவர்களால் செய்யக்கூடிய சேவையையோ நீங்கள் மறந்துவிடக்கூடாது. பம்பாயில் நான் கம்யூனிஸ்டுகளைப் பார்த்திருக்கிறேன். சமூகத்துறையிலும், கலைத்துறையிலும், அரசியல் பொருளாதார விஷயங்களிலும், அவர்கள் சேவை மெச்சத்தகுந்தது" என்று பேசினர்.

இறுதியாக, "கம்யூனிஸ்டுகளைப்போல நீங்களும் விஷய ஞானம் பெற புத்தகங்கள் படிக்கவேண்டும். அபூர்வமான புத்தகங்களை அவர்கள் பிரசுரித்துள்ளார்கள். கூச்சல் போடுவதுடன் திருப்தி யடைந்துவிடாதீர்கள்" என்று கேட்டுக்கொண்டார்.

## ஜனசக்தி

தந்தி விலாசம் "ஜனசக்தி" டெலிபோன் நெ. 3887
வருட சந்தா ரூ. 5. 6 மாதம் ரூ. 3. 3 மாதம் ரூ. 1-8-0.

# பொன்மலை மகாநாடு

பொன்மலையிலே ஜூன் 22, 23, 24ந் தேதிகளில் தென்னிந்திய ரயில்வேத் தொழிலாளிகள் மகாநாடு நடைபெறும். இந்திய ரயில்வேக்களிலேயே—ஏன் இந்தியாவிலேயே—மிகப் பெரியதும் பலம் வாய்ந்ததுமான சங்கம் அவர்களுடையது.

மகாநாட்டுக்காக நடைபெறும் பிரசாரத்தையும் ஏற்பாடுகளையும் பார்த்தால் தமிழ்நாட்டு மக்களின் வாழ்க்கையிலே இம் மகாநாடு ஒரு பெரிய சம்பவமாகக் கொண்டாடப்படுமென்று தோன்றுகிறது. பொதுமக்களிடம் பிரசாரம், பண வசூல், ரயில் வண்டிகளில் மட்டுமல்ல, கிராமங்களிலும், நகரங்களிலும் கூட. 30,000 பேரை அங்கத்தினராகத் திரட்ட திட்டமிட்ட இச்சங்கம் 50,000 மக்களைத் திரட்டி ரூ. 25,000 வசூலிக்கும் திட்டத்தையும் பூர்த்தி செய்துவிடுவார்களென்றே தோன்றுகிறது.

தமிழ்நாட்டின் வாழ்க்கைக்கு ஜீவநாடி போன்றது ரயில் போக்குவரத்து. தமிழ மக்களின் பொருளுற்பத்தியை வளர்ப்பதிலும், தமிழ் மக்களின் வாழ்க்கை வசதிகளைக் கொண்டுவந்து குவிப்பதிலும், தமிழரின் வர்த்தகத்தைப் பெருக்குவதிலும் இந்த ரயில்வேயில் வேலைபார்க்கும் 42,000 ஊழியர்களுக்குப் பெரும் பங்கு உண்டு. யுத்தகாலத்தில், பஞ்சத்தினிடையில் அவர்கள் செய்துவந்த சேவை மகத்தானது. இனியும் அம்மாதிரி மகத்தான சேவையைச் செய்யத் திட்டமிடுவார்களென்று நம்புவதற்கு இடமுண்டு.

இன்று நம் நாடு அதன் வாழ்க்கையில், அரசியலில், சமூகப் பொருளாதாரத்தில் ஒரு சிக்கலான கட்டத்திலிருக்கிறது. ரயில் வண்டிகளிலே கூட்டம், டிக்கட்டுக்குத் திண்டாட்டம்; வாகன்கள் சரிவரக் கிடைப்பதில்லை. வர்த்தகர்களுக்கும் வியாபாரிகளுக்கும் கஷ்டம்; புதிய புதிய தொழில்களை அபிவிருத்தி செய்து பொது மக்களுக்குப்பயிற்சி அளிக்கவேண்டும், தொழில்களுக்குவேண்டிய பொருள்களைக் குவிக்கவேண்டும்,—யுத்த பிற்காலத் திட்டத்தை நிர்மாணிப்பதிலே தொழிலாளிக்குப் பெரும்பங்கு உண்டென்பதை இந்த போக்குவரத்து வீரர்கள், நம் நாட்டின் புதல்வர்கள், எடுத்துக் கூறுவார்கள். அதற்கு வேண்டியதைச் செய்யும் நல்ல யோசனைகளையும் தாங்கள் கூறமுடியும் என்பதையும் நிரூபிப்பார்கள் என்று நம்புகிறோம்.

சமீபத்தில் கூடிய இச்சங்கத்தின் "ரயிலோட்டுவோர் மகாநாடு" கரிச் சேமிப்புக்கு திட்டம் தந்தது. இப்பொழுது கூடப்போகும் மகாநாட்டின் முதல் சம்பவம் ஒரு போக்குவரத்து மகாநாடு என்பதைக் கண்டு நாம் மகிழ்ச்சி அடைகிறோம். லஞ்சத்தையும் போக்குவரத்து ஊழல்களையும் வரட்டு ஜம்பம் பிடித்த அதிகாரிகள் ஒழிக்கமுடியாது. திறம்பட நடத்தப்படும் போக்குவரத்தும், லஞ்சத்தை ஒழிக்கும் இயக்கமும் பொதுமக்களும் தொழிலாளிகளும் கூடி நடத்தவேண்டிய விஷயம். இரண்டு வருஷங்களுக்கு முன்னர் நாம் பொதுஜனப் போக்குவரத்து கமிட்டிகளை ஏற்படுத்த வேண்டுமெனறோம். இன்றைக்கு அதை ஏற்படுத்துவதற்கான நடவடிக்கை மகாநாட்டின் முதல் விஷயமாக இருப்பதுபற்றி நமக்கு சந்தோஷம்.

ரயில்வேத தொழிலாளிகளுடைய குறைகள் பல. சென்றவார இதழில் தோழர் கல்யாண சுந்தரம அவற்றை எடுத்துரைத்திருக்கிறர். பொதுமக்களுக்குத் தெரியாத ரயில்வே ஊழியர்கள் 100க்கு 80 பேர் இருககும். அவர்களுடைய சேவையை உணர்ந்து ரயில்வேத் தொழிலாளிகள் பெரும்பான்மையோரின் துயர்களை பொதுஜனம் உணருவதற்கு மகாநாடு உதவியாயிருக்குமென்று நம்புகிறோம்.

மகாநாட்டின் அரசியலில் நமக்கும் பொதுமக்களுக்கும் விசேஷ அக்கரை உண்டு. 1942ல் சரியான அரசியல் கொள்கையுடன் நின்றது இச்சங்கம்தான். இன்றைக்கு வேவல் துரையின் மாயப்பெட்டியிலே என்ன இருக்கும் என்று எதிர்பார்த்து நிற்கின்றனர் பல அரசியல்வாதிகள். இம் மகாநாடு மாகாணத்தில் கூட்டுமந்திரி சபை அமைப்பது பற்றியும் விவாதிக்கும் என்பது பொறுப்பாட்சி பொதுஜனங்களுக்கு எவ்வளவு அவசியமான பிரச்னையாகிவிட்டது என்பதையே குறிக்கின்றது. இம் மாகாணத்தில் கட்டுப்பாடான ஸ்தாபன அமைப்புடன் திரண்டுள்ள தொழிலாளர் சக்தி இது; தமிழ்நாடு கேரளம் முழுதும் கிளைகளுள்ள ஸ்தாபனம். அவர்கள் நாட்டின் நிலைமையை உணர்ந்தே இப்பிரச்னையை விவாதிக்கப் போகிறர்கள்.

ஒருகட்சி மந்திரிசபையோ, தோல்வி மனப்பான்மையுடன் சரணடைவதையோ தொழிலாளிகள் ஆதரிக்கமாட்டார்கள். நாட்டிலுள்ள பிரச்னைகள் தீர்க்கப்பட வேண்டுமென்றல் தொழிலாளர்களுக்குள்ளே இச்சங்கம் சமைத்துள்ள ஒற்றுமை, வெளியிலும் அவசியம் என்பதை இச்சங்கம் எடுத்துரைக்க வேண்டும். பற்பலவகைப்பட்ட ஊழியர்களை ஒரு கொடியின்கீழ் திரட்டி அதன் சக்தியை உணர்ந்த இச்சங்கம் கூட்டு மந்திரிசபை வேண்டுமென்று கூறினல், அதை அரசியல் கட்சிகள் ஏற்றுக்கொள்ளவேண்டும். அது தமிழரின் வாழ்க்கையிலே புதிய கட்டத்தை ஆரம்பிக்கும் புனித முயற்சியாகும்.

# ★ தேசபக்தன் டயரி ★

(தோழன்)

### ஆஹா! அபாரம்!

பிரதம மந்திரி சர்ச்சில் தேர்தல் முழக்கத்தில் கூறுகிறர்:—

"காலனிகளில் நம்முடைய 'ரிகார்ட்டு'க்கு (செயல்களுக்கு) ஈடே கிடையாது".

—ரொம்பவும் வாஸ்தவம்தான். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் காலனிகளில் கொள்ளையடித்து சுரண்டிக் கொழுத்ததைப் போல எங்காவது நடந்திருக்கா?

—யுத்தம் ஆரம்பித்த நாள் முதல் 40 கோடி இந்தியர் வாழும் தேசத்தில் பொறுப்பாட்சியின்றி யுத்தத்தை நடத்தியிருக்கும் செய்கைக்கு ஈடேது! இணையேது!

* * *

### நண்பரா?

ஏமரி நிற்கும் தொகுதியில் ரொம்ப நாட்களுக்கு முன்னலேயே ரஜனி பாமிதத்தை நிறுத்தி வைப்பதாக பிரிட்டிஷ் கம்யூனிஷ்ட் கட்சி தீர்மானித்தது. அவருக்கு ஆதரவாக அ.இ.தொ.ச. காங்கிரஸ் தலைவர் டாங்கேயும் மற்றும் பல இந்திய ஸ்தாபனங்களும் பிரசாரம் செய்கின்றன.

ஆனல் தொழிற் கட்சியின் சார்பில் நிற்கும் அல்டெர்மன் ஷீரர் மட்டும் "பாமிதத் மாத்திரம்"தான் இந்திய சுதந்திரத்திற்காகப் பேசுகிறரோ! எங்கள் கட்சியும்தான் இந்தியாவுக்கு சுய ஆட்சி வேண்டுமென்கிறது" என்று கூறி தன் நிய மனத்தை வாபஸ் வாங்க மறுத்துவிட்டாராம்.

தொழிற்கட்சி பிரதிநிதி ஏமரியை எதிர்க்கிறரா அல்லது பாமிதத்தை எதிர்க்கிறரா என்று தெரியவில்லை. ஏமரிக்கு எதிராகப் போடும் ஓட்டில் பாதியாவது ஷீரருக்கு விழுந்து ஏமரி வெற்றிபெற்றல் அவர் இந்திய சுதந்திரத்தின் விரோதி என்றுதான் இந்தியர்கள் கூறுவார்கள்.

* * *

### மூலஸ்தானம்

"பிடித்த பிரதேசங்களை ஜீரணம் செய்ய ரஷ்யா ஏற்பாடு" என்று கொட்டை எழுத்துக்களில் 'பாரததேவி' தலைப்புக்கொடுத்திருக்கிறது.

"விசேஷ நிருபர்" சரடுகளை அப்படியே விழுங்கிவிடும் கொட்டையெழுத்து என்கிறர் "லோக சஞ்சாரி"

இல்லை, விசேஷ நிருபரே இல்லை. பாரததேவி ஆசிரியர், மூளையிலுதிக்கும் விசேஷ சரடு என்கிறேன் நான். மூலஸ்தானம் பாரததேவி ஆசிரியரின் மூளையா, விசேஷ நிருபர் தந்தியிலா?

* * *

### வணங்கா முடி!

"அமெரி அசைகிறர்"......ஆனல் அமெரியும் லார்டு வேவலும் பரிபூர்ணமாக வளைந்து கொடுத்து காங்கிரஸுடன் சமரஸம் செய்துகொள்ளத் தயாராயிருந்தாலொழிய சமிக்ஞைகளால் பயனில்லை"

—பாரததேவி.

"ஆதலால் வீராதி வீரப் பிரதாபர்கள் நாங்கள். என்றைக்கும் எதற்கும் நாம் வணங்கமாட்டோம். எல்லாம் எங்கள் காலில் வந்து விழும்—அப்பொழுது எங்கள் கௌரவத்தைக் காப்பாற்றிக்கொண்டு நிற்போம்"—ஒரு புரட்சி பிரகிருதி

உலகம்போகும்போக்கில் அமெரி கூட அசைந்துவிட்டான்! ஆனல் நாம் அப்படியே நிற்கவேண்டும்.

### மனந் தளர்ந்தால்

"ஏகாதிபத்தியம் பிரமாதமாக வெற்றி அடைந்துவிட்டது. அதி பராக்கிரமசாலி யாகிவிட்டது. அப்பொழுது ஒரு நெருக்கடி இருந்தது. ஏதோ கொடுக்கிறேன் என்றது. அதை வேண்டாமென்று தள்ளிவிட்டோம். இப்போது அப்படி செய்துவிடக்கூடாது. கொடுப்பதை வாங்கிக்கொண்டு அப்பால் பார்த்துக் கொள்ளலாம்"

—ஒரு அரசியல் யதார்த்தவாதி.

சர்ச்சில்கூட தான் அதிபராக்கிரமசாலியாகி விட்டதாக கூறவில்லையே! நாம் மனந் தளர்ந்து கிடப்பதனல்தான் இந்த யதார்த்தவாதிகளுக்கு அப்படித் தோன்றுகிறது போலும்!

* * *

### காக்கை பிடியார்

டாக்டர் சையது மாமூத் கோகலே மண்டபத்தில் பேசினர். மேடையில் மகாகனம் சீனிவாச சாஸ்திரியும், ஸர் கோபாலசாமி அய்யங்காரும் மற்றும் பலரும் காணப்பட்டனர்.

எங்கேயாவது ஒரு காங்கிரஸ் சங்கத் தலைவர் இருக்கிறராவென்று கண்ணைத் துடைத்துத் துடைத்துப் பார்த்தேன்! ஒருவரையும் காணேம்!

காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினருக்கு காங்கிரஸ் சங்கவாதிகள்,—"அசல்" காங்கிரஸ்காரர்கள்—செலுத்தும் மரியாதைபோலும்!

முன்பு ஸரோஜனிதேவியைப் போய் காக்காய் பிடிக்கவில்லை என்று அவர்கள் கூறியதுபோல, இன்றைக்கும் நடந்துகொள்ளுகிறர்கள் போலும்!

* * *

### அறிமுகம்

பெயர்: டாக்டர் ராமசாமி முதலியார்.

ஊர்: திருநெல்வேலி பேட்டை.

தொழில்: முனிசிபல் டாக்டர், மற்ற விவகாரங்களிலும் அக்கரை செலுத்துபவர். ஜவுளி உற்பத்தியாளர் சங்கத் தலைவர்.

செயல்: நெல்லை நெசவுத் தொழிலாளர் சங்கத்தின் பொதுக் கூட்டத்தை அறிவித்த தோழர் ராமலிங்கத்தை பிரம்பால் பின்னலிருந்து அடித்தாராம்.

காரணம்: கோபம், தாபம், பொருமை, பொச்சாப்பு எல்லாம் பொங்கி எழுந்து மூளைக்கேறியதாகத் தோன்றுகிறது.

# தவிர்க்க முடியாதா ?

கொள்முதல் திட்டத்தை எப்படி துட்டி அதிகாரிகள் கொலை செய்கின்றனர் என்று சென்றவாரம் எழுதியிருந்தேன். இந்தவாரம் ஏன் அவர்கள் அவ்விதம் செய்யவேண்டி ஏற்படுகிறது? அவ்விதம், விவசாயிகளை நிர்ப்பந்தித்து, அரை மூட்டை, கால் மூட்டை தானியத்தையும் பறிமுதல் செய்வதைத் தவிர்க்கமுடியாதா?

கோவை ஜில்லாவைச் சுற்றிப் பார்த்துவந்த ஒரு தோழர், அங்கு இன்னும் ஒரு மாதத்திற்குக்கூட ரேஷனிங் நிற்காது என்று எனக்கு எழுதுகிறார். அதற்குக் காரணம், சர்க்காரிடம் போதிய ஸ்டாக் இல்லாமலிருப்பதேயாகும் என்று கூறுகிறார்,

உணவுப் பொருள் கிடைக்காமல் திண்டாடும் ஜனங்கள், இதில் அதிக கவனம் செலுத்தவேண்டியிருக்கிறது. போன வருடம் கிராமங்களில் ஜனங்கள் பட்டபாடு நமக்கு நன்ருகத் தெரியும். இந்த வருடமும் அவ்விதம் நடக்காமல் பார்த்துக் கொள்வது நம்முடைய கடமை.

பர்மா மீட்கப்பட்டுவிட்டது. இனி அங்கிருந்து அரிசிவந்துவிடும் என்று மனப்பால் குடிப்பதற்கில்லை. ஏனெனில், இன்று பர்மாவிலிருந்துவரும் ரிப்போர்ட்கள், அங்கே வங்கப் பஞ்சம் போன்ற ஒரு பஞ்சம் ஏற்படுவதற்கான நிலைமை வளர்ந்து வருகிறதென்பதைக் காட்டுகின்றன. பர்மா அரிசி வர வெகுகாலம் பிடிக்கும். அதை நம்பி, உணவுப் பிரச்சினை தீர்ந்துவிட்டது என்று நாம் நினைத்தால், பெருந்தவறு இழைத்தவர்களாவோம்.

### "உழவர் ஊழியன்"

### ஸ்டாக் கிடைக்கவில்லை

விவசாயிகளிடம் விளையக்கூடிய தானியம் கள்ளமார்க்கெட்டிற்கு அநேகமாக சென்று விடுகின்றன என்றும், அதனால் சர்க்கார் கொள்முதல் அதிகாரிக்கு அவை கிடைக்கவில்லையென்றும் மேற்சொன்ன தோழர் கூறுகிருர். போதிய ஸ்டாக் கிடைக்காத அதிகாரி, ரேஷன் சீட்டு வைத்திருப்பவர்களுக்கு தானியம் சப்ளை செய்யமுடியாமல் திண்டாடுகிருராம். இதைக் கண்டு கோபமுறும் மேல் அதிகாரிகள் கொள்முதல் ஆபீஸர்களை மிரட்டுகிருர்களாம். தன் உத்தியோகத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காகவாவது, கொள்முதல் அதிகாரிகள், எப்படியாவது தானியம் சேகரிக்க எத்தனிக்கின்றனராம். அதனுல், கிராமங்களில் புகுந்து இருப்பதையெல்லாம் பறிமுதல் செய்கிருர்களாம்.

### வருந்தத் தக்கது

இது உண்மையானுல், ரொம்ப விசனிக்கவேண்டியதே. விவசாய மக்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும். நிறைய தானியம் கண்டுமுதல் செய்கிற நிலச்சுவான்தார்கள், கள்ள மார்க்கெட்டில் அதிக லாபம் சம்பாதிக்க நினைக்கலாம். அதனுல், உபரி பூராவையும் சர்க்கார் கொள்முதல் ஆபீஸரின் மூலம் விற்காமல், திருட்டுத்தனமாக அதிக விலைக்கு விற்கலாம். இதனுல் என்ன ஏற்படுகிறது? நகரத்திலுள்ள ஜனங்களுக்குபோதிய தானியம் கிடைக்கவில்லை. நகர ஜனங்களின் தொந்தரவு பொறுக்காத அதிகாரிகள், கிராமத்திலுள்ள ஏழை விவசாயிகளின் தானியத்தையெல்லாம் மிரட்டி பறித்துச் செல்கிருர்கள். உபரியைப் பதுக்கிவைத்த நிலச்சுவான்தார்கள், தங்களிடமுள்ள பணத்தின் பலத்தால், அதிகாரிகளின் கண்ணில் படாமல் தப்பித்துக் கொள்கிருர்கள். உடனே, கொஞ்ச நஞ்சம் சாப்பாட்டிற்கு வைத்திருந்த தானியத்தையும் இழந்த ஏழை விவசாயி, கிராமத்திலுள்ள கள்ளமார்க்கெட் நிலச்சுவான்தாரிடம் போய், ஒரு ரூபாய்க்கு ஒருபடி, ஒன்றரைப்படி என்று தானியம் வாங்கி கஷ்டப்படும் நிலைமை ஏற்படுகிறது. இதனுல், ஏழை விவசாயிகள் இரண்டு பக்கமும் இடிபட நேரிடுகிறது—ஒரு பக்கம் அதிகாரிகள், மற்ருெரு பக்கம் கள்ளமார்க்கெட் நிலச்சுவான்தார்.

இதோடு, கொள்முதல் அதிகாரிகளின் போக்கும் இதற்குக் காரணம். ஆரம்பத்தில் ஒழுங்காக கொள்முதல் செய்வதில்லை. விவசாயிகளைக் காக்கவைத்துத் தொந்தரவு படுத்துகின்றனர். கடைசியாக கட்டாயக் கொள்முதல் என்று விவசாயிகளை நிர்பந்திக்க ஓடுகிருர்கள்.

### எப்படி தவிர்ப்பது ?

ஆகவே, இதைத் தவிர்க்க விவசாயிகள் முற்படவேண்டும். இல்லையேல் அடுத்துவரும் நாட்களில் உணவிற்கு திண்டாடநேரிடும்.

எப்படித் தவிர்ப்பது? கிராமத்தில் விளையும் உபரி பூராவையும் சர்க்கார் அதிகாரியிடமே விற்பனை செய்ய, விவசாயிகளும், கிசான் சபைகளும் முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும்.

இதுமட்டுமல்ல. சோளம், சாமை, வரகு, தினைமுதலிய தானியங்களைச் சாப்பிட்டு பழக்கமுடையவர்கள், அவற்றையே சாப்பிட முயலவேண்டும். எல்லோரும் அரிசியேதான் வேண்டுமென்று கோஷமிட்டால், அரிசி கிடைக்காது. அப்படி ஒரு வட்டாரத்தில் எல்லோருக்கும் அரிசி சப்ளை செய்துவிட்டால், மற்ற வட்டாரங்களில் அரிசியே கிடைக்காமல் போய்விடும். இதையும் பொது ஜனங்கள் சிந்தித்துப்பார்க்க வேண்டும்.

### வெறுப்பு கண்ணை மறைக்க விடக்கூடாது

இன்றைக்கு அதிகாரம் செலுத்துகிறவர்களின்மீது நமக்கு வெறுப்பேற்படலாம். அரிசியே சப்ளை செய்ய வேண்டுமென்று கிளர்ச்சி செய்யலாம். ஆனுல், நடைமுறையில் அதனுல் பிரச்சினையைத் தீர்த்துவிடமுடியாது.

ஒரு தேசிய சர்க்கார் வந்தாலும் சரி, ஜனங்களின் பூரண ஒத்துழைப்பின்றி, உணவு பிரச்னையை சமாளிக்கமுடியாது. விவசாயிகள் இதை உணர்ந்து, பஞ்சத்திலிருந்து தப்பவேண்டும். அதிகாரியின் மீதுள்ள வெறுப்பினுல், அவரிடம் தானியத்தை விற்காமல் பதுக்கவோ கள்ளமார்க்கெட்டில் விற்கவோ நினைத்தால், அதனுல் கஷ்டப்படப்போவது நாம்; கொழுக்கப் போவது கள்ளமார்க்கெட்!

## தீர்மானங்கள்

இம்மாதம் 4-ம் தேதியன்று, மணப்பாறையில் நடைபெற்ற, தமிழ்நாடு விவசாயிகள் சங்க நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில் சில சுருக்கிக் கொடுக்கப்பட்டிருக்கின்றன :

**1**

விக்கிரமசிங்கபுரத்தில் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்திலும், கம்யூனிஸ்ட் கட்சி ஆபீஸிலும் நுழைந்து ஊழியர்களையும், பொதுமக்களையும் தாக்கி அக்ரமமாக போலீஸார் நடந்துகொண்டதை இக்கூட்டம் கண்டிக்கிறது.

**2**

வடஆற்காடு ராமனுதபுரம் ஜில்லாக்களில் சில ஆண்டுகளாக அமுலிலிருந்துவரும், கூட்டங்களுக்கு தடைவிதிக்கும் உத்திரவை வாபஸ்வாங்கவேண்டும். மன்னார்குடி டிவிஷனில் போடப்பட்டிருக்கும் இதே உத்திரவையும் கண்டிக்கிறது.

**3**

ஆந்திர விவசாயிகளின் தலைவர் தோழர் சுந்தரய்யா கைது செய்யப்பட்டிருப்பதையும், அவர் ஜெயிலில் நடத்தப்படும் விதத்தையும் மிக வன்மையாக கண்டிக்கிறது. உடனே அவரை விடுதலை செய்யவேண்டும்.

**4**

கோயம்புத்தூர், ராமனுதபுரம் திருநெல்வேலி ஜில்லாக்களில் அமுல் நடத்தப்பட்டுவரும் கிராமப் பங்கீடு திட்டம் நடைமுறையில் சரிவர வேலைசெய்யவில்லை. ஒரு பலனுள்ள கொள்முதல் திட்டம் அமுலில் இல்லாததுதான் அதற்குக் காரணம். இன்று அமுலிலிருக்கும் கொள்முதல் திட்டத்தில் கீழ்குறிப்பிடப்படும் பலஹீனங்கள் குறிப்பிடத்தக்கவை.

1. குறைந்த நிலமுள்ள விவசாயிகளிடம் நியாய விரோதமாகக் கொள்முதல் செய்வது; அதிக நிலமுள்ள விவசாயிகள் பெரும் பகுதி உபரியை சேமித்துக் கள்ளமார்க்கெட் விலைக்கு விற்பனை செய்வது.

[உ-ம்: ராமனுதபுரம், கோயம்புத்தூர், திருச்சி ஜில்லாக்கள்.]

2. சில இடங்களில் உபரிதானியத்தை விற்கமுடியவில்லை. அதனுல் நிர்ணயிக்கப்பட்ட விலையே விவசாயிகளுக்குக் கிடைப்பதில்லை. இந்த நிலைமையில் கிஸ்திக்கும் ஜமீன் வரிக்கும் நிர்ப்பந்தப்படுத்தப்பட்டு, தானியத்தைக் குறைந்த விலைக்கு விற்கவேண்டிய அவசிய மேற்படுபடுகிறது.

[உ-ம்: தஞ்சை, சிவகங்கை ஜமீன், சேலம் முதலிய இடங்கள்.]

3. ஜில்லா உணவுக் கமிட்டிகளில் பொதுஜனப் பிரதிநிதிகளையும்—குறிப்பாக விவசாயிகள் சங்கப் பிரதிநிதிகளையும்—சேர்க்காமலிருப்பது.

மேற்கண்ட பலஹீனங்களும் மூன்று ஜில்லாக்களில் மட்டும் கொண்டுவரப்பட்டிருக்கும் கிராமப் பங்கீடு திட்டத்தையே பலனற்றதாக செய்துவிடுகின்றன.

## ஈரோடு தாலுகா
# விவசாயிகள் மகாநாடு !

கோவை ஜில்லா சரித்திரத்திலேயே, முதன் முதலாக மாபெரும் விவசாயிகள் மகாநாடு ஈரோட்டில் நடைபெற்றது. ஈரோடு தாலுகா விவசாயிகள் மகாநாடே இது! 5000 பேருக்கு மேல் விவசாய மக்கள் திரண்டிருந்தனர். அதில் சுமார் 1000 பெண்கள் வரை கலந்துகொண்டனர். தொழிலாளரும் விவசாயிகளும் ஒன்று சேர்ந்து நிற்பதற்கு சிறந்த உதாரணம் இம் மகாநாடு. ரயில்வே தொழிலாளர் விவசாயிகளுடன் ஒன்றுபட்டனர்! சுத்தியும் அரிவாளும் தாங்கிய செங்கொடி புன்னகை பூத்து, தவழ்ந்து பறந்தது!

ஈரோடு தாலுகா விவசாயிகள் மகாநாட்டின் பிரதிநிதிகள் கூட்டம் 26—5—45ல் ஆரம்பமாயிற்று. 38 கிராமங்களிலிருந்து 172 பிரதிநிதிகள் பங்கெடுத்துக்கொண்டனர். 300 பார்வையாளர்கள் நடவடிக்கைகளை கவனித்தனர். ஒவ்வொரு பிரதிநிதிக்கும் தீர்மானங்களின் மீது பேசுவதற்கு முழு சந்தர்ப்பம் கொடுக்கப்பட்டது. தோழர் பி. சுந்தரய்யா கைது, கொள்முதல் திட்டம், ரேஷனிங், விவசாயத் தேவைப் பண்டங்கள், உணவுப் பெருக்கு, அரசியல் முட்டுக்கட்டையை உடைப்பது முதலியவற்றைப்பற்றி, தீர்க்கமாக விவாதித்துத் தீர்மானங்கள்நிறைவேற்றப்பட்டன.

மறுநாள் மாலை 2000 பேருக்கு மேலிருந்த மாபெரும் ஊர்வலம் மகாநாட்டுப் பந்தலை யடைந்தது. பந்தலில் சுமார் 5000க்கு மேல் ஜனங்களிருந்தனர். அநேக விவசாயிகள், குடும்பத்தோடு, கிராமங்களிலிருந்து வந்தது குறிப்பிடத்தக்கது.

தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் காரியக் கமிட்டி அங்கத்தினர் தோழர் பி. கே. ராமசாமி செங்கொடி யேற்றிவைத்தார். கோவை காங்கிரஸ் சங்கத் தலைவர் ஸ்ரீ வி. என். ரங்கநாதன் மகாநாட்டைத் திறந்து வைத்தார். தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் தலைவர் ஸ்ரீ பொன்னம்பல கவுண்டர் மகாநாட்டிற்குத் தலைமை வகித்தார்.

இந்த மகாநாட்டில் விவசாய மக்கள் காட்டிய ஊக்கமும், உற்சாகமும், சங்க ஊழியர்களாகிய எங்களுக்கு பன்மடங்கு உற்சாகத்தையும் உணர்ச்சியையும் ஊட்டியிருக்கின்றது. மகாநாட்டின் செலவிற்கு பணம் வசூலிப்பது இவ்வளவு எளிதாக இருக்கும் என்று நாங்கள் எண்ணவில்லை. கிராமங்களில் நடந்த கூட்டங்களில் விவசாயிகள் தாங்களாகவே தங்கள் நன்கொடை

(8-ம் பக்கம் பார்க்க)

# ஆசிரியருக்குக் கடிதங்கள்

### டாக்டர் சுப்பராயன் யோசனை

ஐயா,

29—5—45ல் சென்னை கோகலே ஹாலில் நடந்த கூட்டத்தில், கம்யூனிஸ்ட் கட்சி தன்னைக் கலைத்துக்கொண்டு விடவேண்டும் என்று டாக்டர் சுப்பராயன பேசியது, கூட்டத்தினரிடையே குழப்பம் ஏற்பட்டது. ஒரு தனி மனிதர் ஒரு கட்சியைக் கலைத்துவிடுவதென்ருல், அதனுலேயே கட்சி கலைந்துவிடாது. அப்படிக் கலைக்கப்பட்டாலும், உண்மைக் கட்சிப்பற்றுடையவருக்கு கட்சி உணர்ச்சி மாருது. ஏழை விவசாயிகள், தொழிலாளிகள்கூடிய பாட்டாளி மக்களுக்காக இன்று பாடுபட்டுவருவது, கம்யூனிஸ்ட் கட்சியே யாகும். இது 1942ம் வருடம் ஆகஸ்டுக் கலவரத்திற்குப் பின் ஏற்பட்ட பிரத்தியட்ச உண்மை. கம்யூனிஸ்ட் கட்சி இன்று கலைந்துவிடுவதால் ஜமீன்தாருக்கு கஷ்டமோ நஷ்டமோ ஏற்படாது. ஏழை பாட்டாளி மக்களுக்கே பெரிதும் கஷ்டமேற்படும். டாக்டர் சுப்பராயன் போக்குக்கும், கூட்டத்தில் பேசிய வாக்குக்கும் மிகவும் வருந்தக்கூடியதாக இருக்கிறது.

ஏ. என். சிவம், காரியதரிசி,
செங்கம் தாலூகா காங்கிரஸ் கமிட்டி

★

### கள்ள மார்க்கெட்டின் ஆத்திரம்!

ஐயா,

எங்கள் ஊரில் சில நாட்களுக்கு முன்பு நெசவு தொழிலாளர் சங்கம் ஏற்படுத்தினேம். 11-5-45ம் தேதி அமாவாசை; எங்களுக்கு லீவ் நாள். மாலை தொழிலாளர் எல்லோரும் சேர்ந்து, 'கள்ள மார்க்கெட் ஒழிக' 'நூல் ரேஷனிங் கார்டு வேண்டும்', என்று கோஷித்து, ஊர்வலம் வந்தோம். இதைக் கண்டு முதலாளிகளுக்கும், வீவர் மாஸ்டர்களுக்கும் பொறுக்கவில்லை. ஊர்வலத்தைத் தடுத்து விட்டனர். "ஊர்வலம் கூடாது, கள்ளமார்க்கெட் ஒழிக என்று சத்தம் போடக்கூடாது" என்று தடுத்தனர். ஊர்வலத்தில் பரபரப்பு ஏற்பட்டது. அமைதியை காப்பாற்றும்பொருட்டு, பொதுக் கூட்டத்தை நடத்தாமல் அன்று நிறுத்திவிட்டோம்.

12–5–45ல் சங்க நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் நடந்தது. நூல் ரேஷன் கார்டு வேண்டுமென்று தீர்மானித்து, அதற்காக 13ம் தேதியிலிருந்து ஒரு மனுவில் கையெழுத்து வாங்கி வந்தோம். வீவர் மாஸ்டர் அதைக் கண்டுவிட்டார். மனுவை வாங்கி வாசித்துப் பார்த்தார். திரும்ப எங்களிடம் அதைக் கொடுக்காமல் எடுத்துக்கொண்டுபோய் விட்டார். அவரைத் தொடர்ந்து சங்க அங்கத்தினர்கள் போனுர்கள். அதற்கு அவர் கூறினுர், "ஐந்து மாதங்களாக நூல் கிடைக்கவில்லை என்பதையும், கள்ள மார்க்கெட்டை ஒழிக்க சங்கம் வேலை செய்யும் என்பதையும் மனுவிலிருந்து எடுத்துவிட்டு, ஆபீஸருக்கு அனுப்புங்கள்" என்ருர்.

நாங்கள் 'முடியாது' என்ருேம். 5 மாதங்களாக நூல் கிடைக்காமலிருப்பது உண்மைதானே என்ருேம். உடனே அவர் மனுவையே கசக்கித் தூர எறிந்துவிட்டார்.

நாங்கள் மறுபடியும் 17ம் தேதி வேருெரு மனுவில் கையெழுத்து வாங்கி, கண்ட்ரோலரைக் கண்டு பேசினேம். சரிக் கணக்கு எடுத்து வரும்படி அவர் கூறினுர். இப்பொழுது, சங்கத்தில் சேர்ந்தால் நூல் தரமாட்டோம் என்று வீவர் மாஸ்டர்கள் கூறுகிருர்கள். கூலியைக் குறைத்துவிடுவோம் என்கின்றனர். சங்க அங்கத்தினர்கள் வீதியில் செல்லும்போது, நக்கல், கையாண்டி செய்து, பலவாருக திட்டுகின்றனர். நாங்கள் பொறுமையுடன், காதில் விழாதவர்கள்போல போய்விடுகிருேம். சங்கத்தில் சேர்ந்தால் ஜெயிலுக்குப் போகவேண்டுமென்று, வீட்டுப் பெண்களிடம் பீதியைப் பரப்புகின்றனர்.

இது மட்டுமல்ல, 26—5—45ல் பெரியகுளம் தாலூகா, வீவர் மாஸ்டர்களெல்லோரும் கூடி கிழ்க்கண்டவாறு தீர்மானித்திருக்கின்றனர். "ரேஷன்கார்டில் 'சொந்தம்' என்று எழுதுபவர்கள், நாளைக்கு கூலிக்கு நெய்ய நம்மிடம் வந்தால் நூல் எடுத்துக் கொடுக்கக்கூடாது. சங்கத்தின் சார்பில் நூல் ரேஷன் கார்டு விநியோகிக்கக் கூடாது. வீவர் மாஸ்டர்தான் கார்டு விநியோகிக்கவேண்டும்." இந்தத் தீர்மானத்தை அங்கீகரிக்கும்படி வற்புறுத்த, சென்னை கமிஷனரிடம் அவர்கள் சென்றிருக்கிருர்கள். 9 கெஜம் தாவணிக்கு ரூ. 4 கூலி இருந்ததை தர மறுக்கிருர்கள். "ஒரு ரூபாய் தான் தருவேன்; மீதியை உங்கள் சங்கத்தினிடம் கேளுங்கள்" என்கிருர்கள்.

இங்கு மொத்தம் 10 வீவர் மாஸ்டர்கள் உண்டு. அதில் மூன்று நான்கு பேர்தான் இவ்விதம் அதிக தொந்திரவு கொடுக்கிருர்கள். இவர்கள்தான் கள்ள மார்க்கெட் அதிகாரிகள்!

K. சுந்தரலிங்கம், தலைவர்,
நெசவுத் தொழிலாளர் சங்கம்
எருமலைநாயக்கன்பட்டி

★

### கண்டு சகிக்காத குமாஸ்தா !

ஐயா,

எங்கள் ஊரில் உள்ள ஜவுளிக் கடைகளில் நடக்கும் கள்ள மார்க்கெட்டைக்கண்டு சகிக்கமுடியாமல், நெஞ்சு குமுறுகிற வர்த்தக குமாஸ்தா நான். இங்கு 16 ஜவுளி கடைகள் இருக்கின்றன. கள்ள மார்க்கெட் இல்லாத கடை ஒன்றுகூட இல்லை. பேரமோ படுமோசம்; பொதுஜனங்களை ரொம்பவும் பாதிக்கக்கூடியதாக இருக்கிறது.

கள்ள மார்க்கெட் பேரத்தின் விகிதம் கெஜக்திற்கு பாப்ளின் ரகத்திற்கு ரூ. ¾ முதல் 1¼ ரூ. வரை வைக்கப்பட்டிருக்கிறது சுமாரான துணிகளுக்கு கெஜத்திற்கு ரூ ½ முதல் ரூ. ¾வரை வைக்கப்பட்டிருக்கிறது. கோட்டாவில் கிடைக்கும் லாங்கிளாத், மல் துணிகளையோ ஜனங்களுக்கு கண்ட்ரோல் விலைப் பிரகாரம் வினியோகம் செய்யாமல், அனுமத்து பில்லுகள் எழுதிக் கொண்டு, துணிகளைத் துண்டு துண்டாக் கிழித்து, கள்ள மார்க்கெட்டிற்காக ஒதுக்கி விடுகிருர்கள்.

ஒரு வர்த்தக குமாஸ்தா,
எட்டயாபுரம்

★

### குட்டி தேவதைக் கூத்து !

ஐயா,

எங்கள் ஊரில் நஞ்சை நிலம் இருக்கிறது. கோடையில் ஒரு சிலர் சாகுபடி செய்திருக்கிருர்கள். சாகுபடி செய்யாத நிலங்கள் அதிகமாக இருக்கின்றன. எல்லா நிலங்களுக்கும் சேர்த்து தீர்வை விதித்திருக்கிருர்கள். நாங்கள் சாகுபடி செய்யவில்லையே யென்ருல், கிராமமுன்சீப் விடுவதாக இல்லை. எல்லோரிடத்திலும் அநேகமாக தீர்வை வசூலித்துவிட்டார். நாங்கள் பெரும்பாலும் ஏழைகள். மேற்படி சாகுபடி செய்யாத நிலங்களுக்குத் தீர்வை வசூல் செய்வது எவ்வித நியாயமும் இல்லை.

ஒரு ஏழை விவசாயி,
மல்லாங்கிணறு
அருப்புக்கோட்டை தாலூகா

★

### ரேஷனிங் ஊழல் !

ஐயா,

எங்கள் ஊரில், சக்கிலிய வீட்டிற்கு மாத்திரம் ரேஷன் கார்டுகள் கொடுத்திருக்கிருர்கள். இதர ஜாதி நாயுடு, நாடார், மூப்பர், பள்ளர், ஆகிய ஏழைகளும், விவசாயக் கூலிகளும் இருக்கிருர்கள்.

எங்கள் ஊரில் கொஞ்சம் நஞ்சை நிலத்தை தவிர, பெரும்பாலும் செவ்வல் நிலம்தான் இருக்கிறது. இதில் வேர்கடலைதான் சாகுபடி செய்யலாம். பட்டாதார்களுக்கு ரேஷன் கார்டு கிடையாது என்று கிராம முன்சீப் சொல்லிவிட்டார். வேர்கடலை பயிர் செய்பவர்களெல்லோரும் பட்டாதார்கள்தான். ஆனுல் அவர்களுக்கு நெல் விளைவதில்லையே!

தி. ராமசாமி நாயுடு
வலையங்களம்,
அருப்புக்கோட்டை தாலூகா

# இலங்கை வாழ் இந்தியர்கள் மகாநாடு

**—ஷண்முகம் பிள்ளை (சிந்துபூந்துறை)**

*[சமீபத்தில் இலங்கை இந்திய காங்கிரஸ் மகாநாட்டிற்கு சென்று டாக்டர் சையது முஹமது இலங்கை வாழ் இந்தியர் பிரச்னையை சென்னைவாசிகள் முன்பு வைத்திருக்கிறார். அவர்களுடைய உரிமைகளைப்பற்றி நாம் அக்கரை காட்டவேண்டுவதுபற்றியும் கூறியிருக்கிறார். ஸ்ரீ ஷண்முகம் பிள்ளை அவர்களும் டாக்டர் ஸையத் முஹமதுடன் இலங்கை இந்தியர் காங்கிரஸுக்குச் சென்றிருந்தார். ஸ்ரீ ஷண்முகம் பிள்ளை நெல்லை காங்கிரஸ்வாதி. ஜில்லா கமிட்டி காரியதரிசியாயிருந்தவர். இந்தியர் நிலைமைபற்றியும் இந்தியர் காங்கிரஸ் கூட்டம்பற்றியும் அவர் எழுதியுள்ள கட்டுரையை நேயர்களுக்கு அளிக்கிறோம்.]* (ஆ-ர்)

இலங்கையில் வாழும் நம்முடைய இந்தியர்களுடைய அழைப்பிற்கிணங்கி நான் அங்கு சென்றிருந்தேன். நான் இலங்கை இந்தியர் காங்கிரஸ் மகாநாட்டிலும், இந்திய லேபர் யூனியன் மகாநாட்டிலும் பிரசன்னமாயிருந்தேன். இரண்டு மகாநாடுகளும் கொழும்பு பம்பலப்பிட்டியா பழைய கதிரேசன் கோவிலில் அமைக்கப்பட்ட ஞானமாணிக்கம் நகரில் நடந்தன.

காரியக் கமிட்டி அங்கத்தினர் டாக்டர் ஸையத் முஹமத், கேரள காங்கிரஸ் தலைவர் ஸ்ரீமதி குட்டியம்மாளு அம்மாள், கேரளக் கவிஞர் வள்ளத்தோல் முதலியோருடன், அந்த மகாநாட்டில் நானும் பங்கெடுத்துக்கொண்டேன். தமிழ் நாட்டு சங்கீத வித்வான்கள் வி. வி. சடகோபனும், சாத்தன்குளம் ஜனாப் எஸ். எம். சேகப்பாவும், இசை விருந்தளித்தனர்.

### இந்தியர் நிலை

இலங்கையின் ஜனத் தொகை 60 லக்ஷம். அதில் கிட்டத்தட்ட 9 லக்ஷம் பேர் இந்தியர்கள். வியாபாரம், தேயிலைத் தோட்டத் தொழிலாளிகள் போன்ற தொழில்களில் பெருவாரியான இந்தியர்கள் இருக்கிறார்கள். இந்தியர்கள் ஒரு பெரிய மைனாரிட்டி சமூகம். பலர் இலங்கையிலே பல்லாண்டுகளாக வாழ்பவர்கள். இலங்கையின் பொருளாதார சமூக வாழ்க்கையின் முக்கிய அம்சம் அவர்கள்.

ஜவஹர்லால் அந்த நாட்டுக்கு விஜயம் செய்த சமயத்தில் இலங்கை இந்தியர் காங்கிரஸ் ஸ்தாபிக்கப்பட்டது. வியாபாரத்தையே தொழிலாகக் கொண்டு வாழும் இந்தியர் சிலர்; தோட்டங்களில் தொழிலாளர்களாய் வாழும் இந்தியர் பலர். வியாபாரத்தில் இந்தியர் பெரும்பங்கு எடுத்துக் கொண்டிருப்பதைக் கண்டு இலங்கையருக்குக் கொஞ்சம் அருவருப்பு உண்டு. தொழிலாளிகளாய் வாழும் 6½ லக்ஷம் பேர்களுக்குப் போதிய வசதிகள் கிடையாது. இந்தியர்களுக்கு சுதந்திர வாக்குரிமை வோட்டுரிமை கிடையாது. அங்கேயே நிரந்தரமாக வாழ்பவர்களுக்கும் பூர்ண பிரஜா உரிமை கிடையாது.

இவ்வருஷம் நடந்த மகாநாடு 5-வது மகாநாடு. காங்கிரஸுக்குத் தலைமை வகித்தவர் சௌம்யமூர்த்தி தொண்டமான்; ஒரு தோட்ட முதலாளி. தலைவர் பிரசங்கத்தில் இலங்கைத் தமிழர் காங்கிரஸைப்பற்றி குறிப்பிட்டார். இந்தத் தமிழர் காங்கிரஸ் இந்தியர் கோரிக்கைகளை ஏற்றுக்கொண்டு விட்டதென்று குறிப்பிட்டார். தலைவர் பிரசங்கத்தில் தற்சமயம் இலங்கையின் அரசியல் அந்தஸ்தை மாற்றுவதுபற்றி ஏகாதிபத்திய சர்க்கார் நியமித்த, ஸோல்பரி கமிஷன் நம் பிரச்னையைத் தீர்க்கும் என்று கூறினார். ஆனால் இலங்கை வாசிகள் பலருக்கு இந்த ஸோல்பரி கமிஷனில் எவ்வித நம்பிக்கையும் கிடையாது.

### ஸ்தாபனங்கள்

இலங்கையின் அரசியல் கோரிக்கைப்பற்றி எல்லா கட்சிகளிடையிலும் இன்னும் ஒ[illegible]மை ஏற்படவில்லை. இலங்கை தேசிய காங்கிரஸ் என்று ஒரு ஸ்தாபனம் இருக்கிறது, இலங்கைத் தமிழர் காங்கிரஸ் இலங்கை இந்தியர் காங்கிரஸ் ஆகிய மூன்று ஸ்தாபனங்கள், தவிர தொழிலாளர் பெடரேஷன் கம்யூனிஸ்டு கட்சி.

இந்த காங்கிரஸ் மகாநாடு நடந்த மறுநாள் இலங்கை இந்திய லேபர் யூனியனுடைய நான்காவது மகாநாடு நடந்தது. இந்தியர் காங்கிரஸின் தலைவரே இந்தியர் லேபர் யூனியன் தலைவர் என்பது வழக்கமாகயிருக்கிறது. மேலும் இந்தியன் லேபர் பெடரேஷன் என்று ஒரு சிறு ஸ்தாபனம் இருக்கிறது. இப்படி தோட்டத் தொழிலாளிகளுக்கு பல்வேறு ஸ்தாபனங்கள் தோன்றி, ஒரு மத்திய ஸ்தாபனம் சரிவர ஏற்படாமலிருக்கிறது. நான் இது விஷயமாக தொழிலாளிகளுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்தேன்.

மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்கள் பல, இலங்கையின் சுதந்திரக் கோரிக்கையை ஆதரித்து இலங்கை வாழ் இந்தியர்களுக்கு வாக்குரிமை கோரிய தீர்மானங்கள்; சிமூர், அஷ்டிகைதிகள், குலசேகரப் பட்டணம் காசிராஜன், ராஜகோபால் முதலியோர் மரணதண்டனை ரத்து செய்யுமாறு கோரிய தீர்மானம். தோட்டத் தொழிலாளிகள் கூலியை உயர்த்த வேண்டுமென்றும், போதிய வசதிகள் ஏற்படுத்த வேண்டுமென்றும் மகாநாடு கோரிற்று.

இந்தியாவிலிருந்து சென்ற எங்களை பேராவலுடன் வரவேற்றனர். கவி வள்ளத்தோல் மூவர்ணக்கொடியேற்றுவித்தார். ஸ்ரீமதி குட்டிமாளு அம்மாள், பெண்கள் மேன்மேலும் சமூக சேவையில் பங்கெடுத்துக்

(6-ம் பக்கம் பார்க்க)

## ஜெர்மன் பூமியில்

# சோவியத் கொள்கையும், ஆங்கிலோ-அமெரிக்கர் கொள்கையும்

*ஜெர்மனி சரணடைந்து விட்டது. அதன் நிலப்பரப்பு முழுவதும் நேசப் படைகள் வசமாகிவிட்டது.*

*அடுத்த படியாக, நாஜிஸத்தையும் ஜெர்மன் ராணுவத் திமிரையும் ஒழித்துக் கட்டவேண்டும். சமாதானத்தை நேசிக்கும் ஜனநாயக ஜெர்மனி புனர்ஜென்ம மெடுப்பதற்கு, பொது மக்களின் மனித உணர்ச்சியை, ஜனநாயக ஆர்வத்தை தட்டி எழுப்பவேண்டும். கிரைமியா மகாநாட்டில் மூவல்லரசுத் தலைவர்கள் விடுத்த பிரகடனத்தில் இதை வற்புறுத்தியிருக்கின்றனர்.*

**எஸ். ராமகிருஷ்ணன்**

ஆனால், சோவியத் வசமுள்ள பிரதேசத்தில் தான், இந்த பிரகடனம் நிறைவேற்றப் படுகிறது. அங்கு நாஜி குற்றவாளிகள் ஈவிரக்கமின்றி தண்டிக்கப் படுகின்றனர். ஜனநாயக நிர்வாகம் அமைக்கப்படுகிறது. ஆனால் மேற்கத்திய நாடுகளின் ஆதிக்கத்திலுள்ள ஜெர்மனியில், நாஜி குற்றவாளிகளுடன் நேசத் தலைவர்கள் 'காதல்' புரிகின்றன.

* * *

### சோவியத் வசமுள்ள பிரதேசத்தில்

சோவியத் யூனியன் கொள்கையின் லட்சியங்கள் இரண்டு. முதலாவதாக நாஜித் தலைவர்களும் குற்றவாளிகளும் ஜெனரல்களும் சிறைப்படுத்தப்படுகின்றனர். இந்த பாமிகளுக்கு மன்னிப்பு கிடையாது. இரண்டாவதாக, ஜெர்மன் பொது மக்களிடம் நேர்மையாக நடந்து கொள்கிறார்கள். நிர்வாகத்தில், அவர்கள் ஒத்துழைப்பை கோருகிறார்கள்.

"பேர்லின், மாஸ்கோ ரேடியோக்கள் நாஜி தலைவர்கள், ஜெர்மன் முதலாளிகள் பாங்கர்கள் ஆகியவர்களையும் ஜெர்மன் பொதுமக்களையும் பிரித்துப் பேசுகின்றன" என்று ராய்ட்டர் நிருபர் கூறுகிறார். "சோவியத் ஒலி பரப்புகளில் நட்புணர்ச்சி ததும்புகிறது"—"விடுவிக்கப்பட்ட பாஸிஸ்டு எதிர்ப்பு கைதிகள் ரேடியோக்கள் மூலம் பிரசங்கங்கள் செய்கின்றனர்" என்று அவர் குறிப்பிடுகிறார்.

"நகரங்களில் ஜெர்மானியர்கள் தங்கள் மேயர்களை தாங்களே தேர்ந்தெடுத்துக் கொள்கிறார்கள்" அவர்கள் நாஜி அனுதாபிகளாயிருக்கக் கூடாதென்பது ஒன்றுதான் சோவியத் நிபந்தனை.

### முன்னைவிட அதிக உணவு

ஜெர்மன் மக்களுக் கேற்பட்ட உணவுக் கஷ்டத்தை நிவர்த்திக்க மார்ஷல்கள் ஜுகாவும், கோனீவும் நடவடிக்கைகள் எடுத்துள்ளனர். ரேஷனிங் முறை அமுலுக்கு வந்துவிட்டது. ஹிட்லர் ஆட்சியில் கிடைத்ததைவிட இப்பொழுது ஜெர்மானியர்களுக்கு அதிக உணவு கிடைப்பதாக சோவியத் மந்திரி சபையின் உபதலைவர் மிகோயான் கூறுகிறார். உணவு நிலைமையை பரிசீலனை செய்வதற்காகவே இவர் ஜெர்மனி சென்று வந்திருக்கிறார்.

"நமது பரம்பரை தர்மமும் மரபும், வீழ்த்தப்பட்ட மக்களிடம் ஜீவகாருண்யம் காட்ட வேண்டுமென்று சோவியத் ஜனங்களுக்கு போதிக்கிறது" என்று அவர் குறிப்பிடுகிறார்.

நகரங்களில் குவிந்து கிடக்கும் இடிந்து, விழுந்த கட்டிடங்கள் அகற்றப்படுகின்றன. தெருக்கள் சுத்தம் செய்யப் படுகின்றன. இதில், ஜெர்மன் ஜனங்களுக்கு செம்படைகள் உதவுகின்றன. விவசாயம் செய்வதிலும் அவர்கள் உதவுகிறார்கள். செஞ்சேனை என்ஜினியர்கள் ஜெர்மன் மின்சாரதொழில்களையும் தண்ணீர் வசதிகளையும் சீர்படுத்துகிறார்கள். டிராம்வேக்கள், போக்குவரத்து மார்க்கங்கள் சீரமைக்கப் படுகின்றன.

ஹிட்லர் ஆட்சிக்கு முன்னிலிருந்த வீமார் குடியரசு சட்டங்கள் பேர்லினில் அமுலுக்குவந்துவிட்டது. ஜெர்மன் போலீஸ் பேர்லினை காவல் புரிகிறது.

### ஜனங்களின் நன்றி

ஜெர்மன் மக்களை செஞ்சேனை பழிக்கு பழி வாங்கப் போவதாக ஹிட்லர் பிரசாரம் செய்தான். அது பொய் யென்பதை மக்கள் அனுபவத்தில் அறிகிறார்கள். சோவியத் கொள்கை அவர்களுக்கு ஆச்சரியத்தை அளிக்கிறது. தாங்கள் செய்த பாவங்களுக்கு தண்டிக்கப் படுவதற்கு பதிலாக தாராளமாய் நடத்தப்படுவதுதான் அவர்கள் வியப்புக்கு காரணம். அதனால் தான், அவர்கள் சோவியத்துக்கு நன்றி செலுத்துகிறார்கள்.

"பாஸிஸ்ட் பிரசாரம் முழுக்க முழுக்க பொய்கள் என்பது நிரூபிக்கப்பட்டு விட்டது. பழைய ஜெர்மன் சர்க்காரைவிட மார்ஷல் ஸ்டாலின் எங்களிடம் அதிக அக்கரை காட்டுகிறார்" என்று அவர்களில் பலர் கூறுவதாக மிகோயான் செ[illegible]கிறார்.

* * *

### மேற்கே

இது கிழக்கே—சோவியத் வசமுள்ள ஜெர்மனியில். ஆனால் மேற்கே, பிரிட்டிஷ் – அமெரிக்க ஆதிக்கத்திலுள்ள பிரதேசத்திலோ இதற்கு நேர்மாறான நிலைமை நிலவுகிறது.

அங்கு, கிழக்கே, சோவியத் நாஜிகளை தண்டிக்கிறது; பொது ஜனங்களை ஜனநாயக ரீதியில் ஒத்துழைக்கும்படி செய்கிறது.

இங்கு, மேற்கே, ஜனநாயக வாசனையே கிடையாது. அதற்கு மாறாக, நாஜி அனுதாபிகளை நிர்வாகத்தில் நியமிக்கிறார்கள்.

இத்தாலியில் படாக்ளியோவையும் பிரான்ஸில் டார்லானையும் யூகஸ்லேவியாவில் மிகலோவிட்சையும் கட்டிப் புரண்டவர்கள் இங்கு டோனிட்ஸ் நிர்வாகத்துக்கே புத்துயிர் கொடுக்கப் பார்த்தார்கள். வெகுண்டெழுந்த ஜனநாயக அபிப்பிராயத்துக்கு பணிந்து வேண்டா வெறுப்பாய் அந்த டோனிட்ஸ் கூட்டைக் கலைத்தார்கள். ஒரு கோடி ஐரோப்பியர்களை பலி வாங்கிய கேல்ஸர்லிங் ராய்ட்டருக்கு பேட்டி கொடுக்கிறான்! கோயரிங், ஷாக்ட், டோனிட்ஸ் முதலியோருக்கு ராஜபோக வாழ்வு!

### அப்ஸர்வர் அத்தாட்சி

இதே கொள்கைதான் நிர்வாகத்திலும் பிரதிபலிக்கிறது. கலப்பற்ற டோரி பத்திரிகையான அப்ஸர்வர் நிருபர் இதை ஊர்ஜிதப்படுத்துகிறார்.

"நிர்வாகத்திலிருந்து நாஜிகளை நீக்குவதில் தயக்கமும் தேக்கமும் ஏற்பட்டிருக்கிறது.

"தென் ஜெர்மனியிலுள்ள ஒரு நகரத்தில் மாத்திரம் 4,000 5,000 நாஜிகள் பரிபூர்ண சுதந்திரர்களாய் வாழ்கிறார்கள்.

"நிர்வாகத்திலுள்ள நாஜிகளை விலக்குவதென்றால், 100-க்கு 60, 70 சதவீத நிர்வாகஸ்தர்களுக்கு கல்தா கொடுக்க வேண்டியிருக்கும்" என்று அவர் எழுதுகிறார்.

பிரிட்டிஷ்–அமெரிக்க நிர்வாகத்

(5-ம் பக்கம் பார்க்க)

## பிரிட்டிஷ் தேர்தல்

# இந்திய விடுதலைக்கு கம்யூனிஸ்டு கட்சி

*நாற்பது கோடி இந்தியமக்களை சுரண்டிக் கொழுக்கும் புல்லுருவிக் கூட்டத்தின் பிரதிநிதி—பழைய உலகத்தின் பிண்டம்—ஏமரியை எதிர்த்து இந்திய சுதந்திர இயக்கத்தின் சின்னம்—சர்வதேச கம்யூனிஸ்ட் தலைவர் **ரஜனிபாமிதத்** போட்டியிடுகிறார். பிரிட்டனில், 638 தொகுதிகளில் தேர்தல்கள் நடக்கின்றன. ஆனால் ஏமரி—பாமிதத் போட்டி மிகவும் முக்கியமானது.*

*ஜூன் மாதம் 2ம் தேதி பாமிதத் தன் தேர்தல் பிரசாரத்தை துவக்கினார்.*

### ராணுவத்தின் ஆசி

"இந்தியாவில் ஏமரியின் முட்டுக்கட்டை கொள்கையால் யுத்தம் நீளுகிறது. இதனால் தாங்கள் ஊர் திரும்ப தாமதமாகிறது என்று தூர கிழக்கில் போராடும் நமது சோல்ஜர்கள் நினைக்கிறார்கள். அங்கிருந்து ரஜாவில் வந்தவர்கள் தங்கள் யூனிட்டுகளிலிருந்து நான் வெற்றியடைய வேண்டுமென்ற ஆசிச் செய்திகள் கொண்டுவந்துள்ளனர்" என்று அவர் முழங்கினார்.

"டோரி கும்பலின் சாயம் இந்தியாவில் வெளுத்திருக்கையில் ஸிரியாவுக்கு ஏன் சீக்கிரம் சுதந்திர மளிக்கவில்லை யென்று டிகாலுக்கு கேள்வி போட டோரிகளுக்கு என்ன வாய் இருக்கிறது" என்று அவர் கேட்டபோது கரகோஷம் அலைமேல் அலையாகப் பெருகியது.

லண்டன், காவண்டரி, பர்மிங்ஹாம் முதலிய நகரங்களிலுள்ள பல்வேறு இந்திய ஸ்தாபனங்களின் பிரதிநிதிகள் 100 பேர் கூடி பிரிட்டிஷ் தேர்தலில் போட்டியிடும் ஒரே இந்திய அபேட்சகரான பாமிதத்தை ஆதரித்து வேலைசெய்ய ஏகமனதாக தீர்மானித்திருக்கிறார்கள்.

### கம்யூனிஸ்ட் கொள்கை

பாமிதத் கம்யூனிஸ்ட்டு கட்சி அபேட்சகர். 22 தொகுதிகளில் கம்யூனிஸ்ட்டு அபேட்சகர்கள் நிற்கிறார்கள். இதர தொகுதிகளில், கம்யூனிஸ்டு கட்சி தொழிற்கட்சி அபேட்சகர்களை ஆதரிக்கிறது.

"இந்தியாவுக்கு சுதந்திர மளித்தால், ஜாப் எதிர்ப்புப் போரை பல மாதங்கள் முன்னதாகவே முடித்து விடமுடியும்" என்று கம்யூனிஸ்ட்டு கட்சி காரியதரிசி ஹாரிபாலிட் வற்புறுத்துகிறார். 40 கோடி மக்களின் இஷ்டபூர்வமான ஒத்துழைப்பு ப்ஸிபிக் யுத்தத்தை சடுதியில் முடிக்குமென்று கம்யூனிஸ்ட்டு கட்சி பிரிட்டிஷ் மக்களுக்கு எடுத்துரைக்கிறது. (இந்தியாவுக்கு சுதந்திர மளித்தால் ஜப்பான் சண்டை நீளுமென்று பாலிட் கூறியதாக அண்டப் புளுகுணி பாரததேவி திரித்துப் பிரசுரித்திருக்கிறது.)

* * *

காங்கிரஸ் தலைவர்களின் விடுதலையையும் இந்தியாவின் பரிபூர்ண சுதந்திரத்தையும் ஆதரித்து, பிரபல நாவலாசிரியரும், நாடகாசிரியருமான பிரீஸ்ட்லி ஒரு அறிக்கை விடுத்திருக்கிறார். அவர் கேம்பிரிட்ஜ் சர்வ கலாசாலைத் தொகுதிக்கு சுயேச்சை அபேட்சகராக நிற்கிறார். இந்திய மாணவர்கள் அவரை ஆதரிக்கிறார்கள்.

* * *

தொழிற்கட்சியின் தேர்தல் பிரசாரத்திலும் இந்தியா முக்கியஸ்தானம் வகிப்பதாக ராய்ட்டர் நிருபர் கூறுகிறார். தலைவர்கள் விடுதலை, தேசிய சர்க்கார் கோரி தொழிற்கட்சி மகாநாடு (டிசம்பர் 1944) தீர்மானித்தது வாசகர்களுக்கு ஞாபகமிருக்கும்.

தொழிற்கட்சியின் இந்தியாகொள்கையை தேர்தல் பிரசாரத்தில் எடுத்துரைக்கப்போவதாக பெவின், பாரிங்டன் முதலிய தொழிற் கட்சித் தலைவர்கள் கூறுகின்றனர். தன் ரேடியோ பிரசங்கத்திலும் பெவின் இந்தியாபற்றி பேசுவார்.

இந்திய சுதந்திரத்தைப்பற்றி தொழிற்கட்சியின் கொள்கையை விளக்கி, இந்தியா உதவி காரியதரிசியாகவிருந்த லிஸ்டோவெல் பிரபு ஒரு சிறு வெளியீட்டை தயாரிக்கிறார்.

"இந்திய நெருக்கடி நீடித்தால் இந்திய நிலைமை வெகு மோசமாகும். நெருக்கடியைத் தீர்க்க, புதிய பார்லிமெண்ட் வைராக்கியம் கொள்ளவேண்டும். அது அத்தியாவசியம்" என்று அவர் கூறுகிறார்.

தொழிற்கட்சித் தலைவர் ஷின்வெல் கூறுவதுபோல், சர்ச்சில் "இந்திய சுதந்திரத்தின் சத்துரு; பிரிட்டிஷ் ஏழை மக்களின் பகைவர்"

டோரி ஆதிக்கம் ஒழிந்த பிரிட்டன், சுதந்திர இந்தியாவின் சம அந்தஸ்தை அங்கீகரிக்கும் பிரிட்டன், பொருளுற்பத்தியைப் பெருக்கி, சுபிட்சத்துக்கு உத்திரவாதமளிக்க முடியும். அதனால்தான், தொழிற்கட்சியும் இதர முற்போக்காளர்களும் இந்திய விடுதலையை ஆதரிக்கிறார்கள்.

(இடமிருந்து வலம்) (1) தோழர் டாங்கே, (2) அ.இ.தொ.ச காங்கிரஸின் மாஜி தலைவர் பென்ரோஸ், (3) பிரிட்டிஷ் கம்யூனிஸ்டு கட்சியின் பொதுக்காரியதரிசி ஹாரிபாலிட், (4) கம்யூனிஸ்டு கட்சியின் தலைவர் ரஜனி பாமிதத், (5) தோழர் கெட்ஜிகர்.

# திருடர்கள் யார்? துணியை பாதுகாப்பவர் யார்?

காசிப்பட்டுக்கும் டாக்கா மல்லுக்கும் பிரசித்திபெற்ற இந்திய நாட்டின் துணி நிலைமை இந்தக் கேட்டுக்கு வரவேண்டுமா? பிணத்தைமூட வகையின்றி முஸ்லிம்களும், ஹிந்துக்களும் பிரேதத்தை எரிக்கும் கதையை நாம் என்று கேட்டிருக்கிறோம்? இன்று ஐக்கிய மாகாணத்தில்–தினசரி சம்பவமாகி விட்டதே இது?

### நம் நாட்டிலா?

சென்ற மாதப் பத்திரிகையைப் பார்த்திருப்பீர்கள். மானமிழந்து மதிகெட்டு வாழுவோ என்று கட்டத் துணியின்று தூக்குண்ட முஸ்லிம் சகோதரியின் கோரக் கதையைப் பாருங்கள். மருமகளுக்கு கட்ட துணியில்லாதபொழுது, மாமன், எப்படி வீட்டில் நுழைவது என்று காசியில் பத்துநாள் ஒரு கவள அன்னத்துக்குகூட வீட்டில் அடி எடுத்து வைக்காத தொழிலாளியின் மன வேதனையை சற்று யோசியுங்கள். மானம் மறைக்க மார்த்துணியின்றி பரிகைஷ செல்லாத மாணவியின் நிலைமையும், துணிக்காக கான்பூர் தெரு முழுவதும் அலைந்த அவள் தகப்பன் தவிப்பும் கேட்பவர் யார்—யார்? யார் குற்றவாளி? குற்றவாளிக்கு கொலை வேண்டாமா?

அரசாங்கம் திட்டம் இடத்தான் செய்கிறது. மாகாண சர்க்கார் திட்டப்படி மாதமொன்றுக்கு 42,000 பேல் கோட்டா ஒதுக்கியிருக்கிறது. இதன்படி வருடம் ஒன்றுக்கு ஒவ்வொருவருக்கும் 10 கெஜம் துணியாகிறது. துணி வெளி மாகாணத்திலிருந்தும் வராமல் இல்லை. வரவில்லையென்றாலும் இந்த கேவல நிலைமை ஏற்பட வேண்டியதில்லை.

### துணியில்லையா?

கான்பூரில் மட்டும் 20 பெரியமில்கள் இருக்கின்றன. கான்பூர் மில்லில் மட்டும் 28,000 பேல் உற்பத்தியாகிறது. அதாவது தலை ஒன்றுக்கு 7 கெஜம் கொடுக்கப் போதுமானது. மாகாணத்தில் இதன்றியும் காசியிலும், கான்பூரிலும், லக்னோவிலும் மில்கள் இருக்கின்றன. ஆனால் துணிக் கஷ்டமும் இருக்கின்றது! சில்லரைக் கடைகளுக்கு லைசென்ஸ் கொடுக்கப்பட்டிருக்கின்றது. கடைகள் இருக்கின்றன: துணிகள் தான் இல்லை. எந்தக் கடையிலும் துணி வாங்குவதுதான் முடியாது. உள்ள நிலைமை இது தான்.

இதன் பலாபலன் சில உயிர் நஷ்டங்களே! கடைக்கு முன் கூடும் கூட்ட நெருக்கடியில் சில நாட்களுக்குள் கான்பூரில் 12 வயது பையனும் மீரத்தில் ஒரு ஹிந்து மாதும், பலீலாவில் ஒரு மாதும், ரசாவாவில் ஒரு கிழவியும் மிதியுண்டு மோதுண்டு மாண்டனர்.

துணி நெருக்கடி இத்துடன் நிற்பது மில்லை. சமீபத்தில் ஜான்ஸியிலும், லக்னோவிலும் கடைகள் கொள்ளையடிக்கப்பட்டன. இவை யாவும் கற்பனையல்ல, பத்திரிகைச் செய்திகள்.

### எங்கே? எங்கே?

துணி இல்லையென்றால் என்ன கொடுத்தாலும் கிடைக்கவில்லை என்று வாசகர்களை நாம் ஏமாற்ற விரும்பவில்லை. நிர்ணய விலைக்கு கஜகர்ணம் போட்டாலும் ஒருதுணி வாங்கமுடியாது கள்ளமார்க்கட்டை கண்டுபிடித்து ஒன்றுக்கு இரண்டு விலை கொடுங்கள்: வேண்டிய துணி—40 ஜோடியானாலும், 50 ஜோடியானாலும் வேஷ்டிகள் வாங்க முடியும்.

கள்ளமார்க்கட்டுக்கு எப்படித் துணி போகிறது? கள்ள மார்க்கெட்டில் லாபம் அதிகம் கிடைக்கிறது. மில்லிலிருந்து நேராக கள்ள மார்க்கெட்டுக்குப் போகிறது. சில்லரை வியாபாரியல்ல கள்ளமார்க்கெட்காரன். மில் முதலாளி–பெரிய ஏஜண்ட் இவர்களே கள்ளமார்க்கெட் பிசாசுகள். இதற்கு விதிவிலக்காக ஒரு மில்கூடக் கிடையாது. சில உதாரணங்கள் மட்டும் கூறுவோம்.

### சுதேசி மில்

பேரைக் கண்டு மலைக்க வேண்டாம். தேசிய வர்ணம் பூசப்பட்டிருக்கும் இந்த மில் ஹாரிஸ்மன் என்ற வெள்ளைக்காரருடையது. தாராள சிந்தையுள்ளவர் என்று கான்பூரில் சில லக்ஷரூபாயில் ஒரு ஆஸ்பத்திரி கட்டி பேர் வாங்கினவர் இவர். இவர் மில் இந்தியாவிலேயே பெரியவைகளில் ஒன்று. இதில் நெய்யும் வேஷ்டிகள் விசேஷம். அந்த மில் வேஷ்டிகள் ஒன்றுவது நிர்ணய விலைக்கு கிடைப்பதில்லை. இது முக்காலும் சத்தியம். இந்த மில்லுக்கு முழு ஏஜென்ஸி கங்காதரபாஜி நாத் கம்பெனிக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. இவர்களுக்கு கீழ் உள்ள பல சில்லரை ஏஜெண்டுகள் மூலம் இக் கம்பெனியிலேயே கள்ளமார்க்கெட் நடப்பது ஊர் அறிந்த ரகசியம். கவர்னர் முதல் காத்தான் வரை இந்த உண்மையை அறிவார்கள். சில்லரை ஏஜெண்டுகள் நால்வருக்கு கள்ளமார்க்கெட் நடத்தியதாக 'சந்தேகத்தின்பேரில்' லைசென்ஸ் ரத்து செய்யப்பட்டது. சமீபத்தில் பாபுலால் ஜீவன்ராம் என்ற கம்பெனி சில்லரை வியாபாரிகளுக்கு 9 ஜோடி வேஷ்டிகளை கொடுத்து 10 வேஷ்டி பெற்றுக்கொண்டதாக கையெழுத்துப்போடும்படி பலவந்தப்படுத்தியிருக்கிறது. அவர்கள் போட்ட கூச்சல் தாங்காமல் அதிகாரவர்க்கம் விசாரணை நடத்தியது. விசாரணையில் என்ன நடந்ததோ—கடவுளுக்குத் தான் வெளிச்சம். ஆனால் முடிவாக இன்னும் கள்ளமார்க்கெட்டில் இந்தப் பேர்வழிகள் தம்பட்டமடிக்கிறார்கள் என்பது பொதுஜனங்களுக்குத் தெரியும்.

இப்படிச் சம்பாதித்த பணத்தைக் கொண்டுதான் E. D. ஸஸ்ஸூன் என்ற கம்பெனியையும் இவர்கள் பம்பாயில் வாங்கமுடிந்தது என்று சொல்லிக்கொள்ளப்படுகிறது.

### ஜே. கே. மில்

சேமித்து வைப்பதில் இந்தியாவில் எனக்கு நிகரில்லை என்று பெயர் வாங்கின பாதம்பத் சிங்கானியாவை நம் பத்திரிகைமூலம் நீங்கள் தெரிந்துகொண்டிருப்பீர்கள். அவருக்குச் சொந்தமான மில் இது. இங்கும் அதே ஊழல்தான். திருப்பவும் சொல்லவேண்டியதில்லை. சில மாதங்களுக்கு முன்புதான் கான்பூருக்கு 2 மாதத்துக்குப் போதுமான நிலக்கரியை சேமித்து வைத்த குற்றத்திற்காக 40,000 ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டார். ஒரு கையால் கஸ்தூரிபா நிதிக்கு ஒரு லக்ஷத்தை கொடுத்துவிட்டு, இந்த தேசபக்தர் மற்றொரு கையால் கவர்னர் மாரிஸ் ஹாலட்டுக்கு யுத்த நிதிக்காக மற்றொரு லக்ஷத்தை வீசும் இவருக்கு 40,000 பெரிதல்ல. கள்ளமார்க்கெட் ஜரூராக நடத்தும் திறமையில் அவருக்கு குறைவேற்படவில்லை.

இவருடைய மில்லில் ஏதாவது சாக்குப் போக்கின் பேரில் வேலை தடைப் படுத்தப்படுகிறது. தொழிலாளிகளை கசக்கி பிழிவதில் திருப்தியடையாமல் மில் நிர்வாகத்தால் நடத்தப்படும் பத்திரிகைக்கும் 2 ரூபாய் தொழிலாளிகள் வருவாயிலிருந்து பிடித்துவிடுகிறார்.

இதன் பங்குதாரரான வைஸ்ராய் நிர்வாக கமிட்டி அங்கத்தினரான J. K. ஸ்ரீ வஸ்தவாவைப்பற்றி அதிகம் கூறவேண்டியதில்லை. இதன் விற்பனை ஏஜெண்ட் பம்பாயைச் சேர்ந்த லாலா கர்னூரயன் லால் என்பவர். சென்ற வருடம் சந்தேகத்தின்பேரில் அவர் கடை பரிசோதிக்கப்பட்டது. கணக்கில் காட்டப்படாத லக்ஷக்கணக்கான ரூபாய்களும், ஆயிரக் கணக்கான பேல் துணிகளும் இருந்தன. இவர்களுடைய சில்லரை ஏஜெண்டுகள் சுமார் 20 பேருக்கு லைசென்ஸ் ரத்து செய்யப்பட்டு மிருக்கிறது. அதனால் விளைந்தபலன் பூஜ்யமே!

### அதிகாரவர்க்கத்துக்குப் பங்கு

வினியோகத்தை நடத்தவோ, கள்ளமார்க்கெட்டை தடுக்கவோ அதிகார வர்க்கத்துக்கு சிறிதும் துப்பில்லை. குட்டி அதிகாரிகள் உடல் முழுவதும் லஞ்சத்தில் ஊறியிருக்கிறது. கொள்ளைலாபக்காரர்களிடமிருந்து மாதவரும்படியாக சன்மானமாக பெறுவதாகவும் சொல்லப்படுகிறது. பெரிய கைகளை திருப்தி செய்ய யுத்த நிதியிருக்கவே யிருக்கிறது. "ப்ரீ பிரஸ் ஜர்னல்" நிருபர் சில நாட்களுக்கு முன்பு தன்னுடைய பத்திரிகைக்கு ஒரு செய்தியனுப்பி யிருந்தார். 'தேசபக்தர்' பாதம்பத் சிங்கானியா, தனக்கு அபராதம் விதித்த சில நாட்களுக்குள் கவர்னரை தன் ஜாகைக்கு வரவேற்று யுத்தநிதிக்கு ஒரு லக்ஷ ரூபாய் யுத்தநிதி கொடுத்ததைப்பற்றி—அன்று அந்த தேசபக்தர் வீட்டில் விருந்தினரை கௌரவிப்பதற்காக யூனியன் ஜாக் கொடி பறந்ததாம்.

### திருடர்களை எதிர்த்து

நிலைமை சீர்கேடானதைக் கண்டு பொறுமல் தொழிலாளிகள் முன்னுக்கு வந்தனர். ஏப்ரல் கடைசி வாரத்தை கள்ளமார்க்கெட்டையும் சேமிப்பையும் எதிர்த்து கொண்டாடினர். தோல்பதனிடுவோர் சங்க காரியதரிசி ஸ்ரீஸத் சர்மாவின் தலைமையின் கீழ் காங்கிரஸ், லீக், கம்யூனிஸ்ட் கட்சி, தீண்டப்படாதோர் கொண்ட கமிட்டியை நிறுவினர். இவர்களின் அறைகூவலின் கீழ் ஏப்ரல் 22ம் தேதி முதல் 29ம் தேதிக்குள் சுமார் 1 லக்ஷம் ஜனங்களை கூட்டங்களில் கூட்டி நிலைமையை விளக்கினர்.

### திருடர்களுக்கு உடந்தைகள்

இந்தவாரத்தில் போலீஸ் தர்பார் தலைவிரித்தாடியது. இவ்வளவு பெரிய பொதுஜன சக்தியைக் கண்டு அதிகாரவர்க்கம் மிரண்டது. ஊர்வலத்திற்குத் தடை. ஆனால் ஜனங்களிடம் புத்துணர்ச்சி ஏற்பட்டதை தடைசெய்யமுடியவில்லை. முதலாளிகளுக்கும், கள்ளமார்க்கட்காரர்களுக்கு கிலி பிடிப்பதிலும் ஆச்சரியமில்லை.

தொழிலாளவர்க்கம் பொதுஜன உரிமையைக்காக்க போராட மறுபடியும் முன்வந்திருக்கிறது.

இதன் உடனடிப்பலன் என்ன: தெரியுமா! தொழிலாளர் தலைவர்கள் யூசப், சாந்தோஷ் கப்பூர், அசோக் போஸ் முதலியவர்களை பாதுகாப்பு சட்டப்படி அரெஸ்ட் செய்திருக்கிறது ஸ்தல அதிகார வர்க்கம். அதுமட்டுமல்ல, ஸ்தல கம்யூனிஸ்ட் கட்சி ஆபீஸில் ஆறு மணிநேரம் சோதனைபோட்டு, எழுத்துப் பிரதிகளை கொண்டு சென்றது. 'அதிகார்' என்ற பத்திரிகை "இவ்வெழுத்துப் பிரதிகளில் கள்ளமார்க்கெட்டையும், சேமிப்பையும் தாக்கி எழுதப்பட்டிருந்தது" என்று எழுதியிருக்கிறது.

அதிகாரவர்க்கத்தின் செயல் திருடர்களுக்கு உடந்தையாய் இருப்பதன்றி வேறல்ல.

கள்ளமார்க்கெட்டை ஒழித்துக் கட்டி, ஐக்கிய மாகாணத்தில் உற்பத்தியாகும் துணியையும், வெளியிலிருந்துவரும் துணியையும் ஜனங்களின் பிரதிநிதிகள் மூலம் வினியோகம் செய்யத்தவறினால் நிலைமை மிகவும் சீர்கேடாகும். இதில் சந்தேகமில்லை. —(பீப்பிள்ஸ்வார்)

# கைத்தறி நெசவுத் தொழிலாளர் கஷ்டங்கள்

*கைத்தறி நெசவாளர்கள் துயர்கள் எல்லையற்றதாய் விட்டன. நூல் சரியாகக் கிடைப்பதில்லை. மாகாணத்திலிருந்து துணி ஏற்றுமதி செய்வதற்குத் தடை, நூல் விநியோகம் செய்வதில் அனுவசியமாக பொருள் நஷ்டத்தை விளைவிக்கும் ஏற்பாடுகள் ஒவ்வொரு ஊரிலும் ஒவ்வொரு விதமான கஷ்டம். ஆனால் இவற்றையெல்லாம் தீர்த்துக்கொள்ள வழியுண்டு என்பதை உணர்ந்து சங்கங்களின் மூலம் தமிழ் நாட்டில் பலவிடங்களில் அவர்கள் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்து விட்டனர்.*

கோயம்புத்தூரில் இருந்து ஒரு செய்தி வந்திருக்கிறது. மாகாண கைத்தறி நெசவாளர் சம்மேளனத் தலைவர் ஸ்ரீ வி. எம். அபிராம செட்டியார் தலைமையில் 28-5-45ல் கூட்டம் நடந்தது. 36நெ. நாலுக்கு மேல் ரகத் துணி வெளி மாகாணத்துக்கு ஏற்றுமதி செய்யக் கூடாது என்ற உத்திரவைக் கண்டிக்க ஆயிரக் கணக்கானவர்கள் கூடினார்கள். 60, 80, 100 நெ. நூல்களில் உயர்ந்த ரக புடவைகள் கோவைத் தறிகளில் உற்பத்தியாவது வழக்கம். இன்றைக்கு இந்தத் துணி ஏற்றுமதி செய்யக் கூடாது என்றால் கோவைத் தறிகாரர்கள் என்னசெய்வது? குறைந்த கவுண்ட் நூல் நெய்வதற்குத் தறியை மாற்ற முடியாது. நெசவாளர்களுக்கு வேலையில்லாமல் போய்விடுகிறது. கூலியையும் மாஸ்டர் வீவர்கள் குறைக்க ஆரம்பிக்கிறார்கள்.

உற்பத்தியான துணியும் தேங்கிக் கிடக்கிறது.

தமிழ் நாட்டில் உற்பத்தி யாகும் கைத்தறி துணிகளில் முக்கால் பாகமும் வட நாட்டுக்குத் தேவையான லுங்கி, தாவணி ரகத்தைச் சேர்ந்ததாகும். இலங்கைக்கும் இத் துணிகள் அதிகமாக ஏற்றுமதியாகி வருகிறது.

இப்போது தேங்கிக் கிடக்கும் துணிகளை வெளியிடங்களுக்கு அனுப்ப உடனே உத்தரவிட வேண்டும். ஏற்றுமதி தடை உத்தரவை ரத்து செய்ய வேண்டும்.

லுங்கியும், தாவணியும் நெய்யப்பட்ட தறிகளில் 36-ம் நம்பர் முரட்டு நூல் ஓட வேண்டுமானால் அச்சை மாற்றியாக வேண்டும். அச்சை மாற்றி வேறு அச்சு மாட்ட வேண்டுமானால் பணச்செலவு ஏற்படுகிறது. பஞ்சகாலத்தில் லக்ஷக்கணக்கான ஏழை நெசவாளிகள் இதைச்செய்து முடிப்பது முடியாத காரியம். ஆதலால் அதற்கான செலவு தொகையை சர்க்காரே ஏற்றுக் கொள்ள முன்வர வேண்டும். அப்படியானாலும் பிரச்னை சுலபமாகத் தீராது. விற்பனை மார்க்கெட்டுகளுக்கு சர்க்காரே உத்தரவாதியாக வேண்டும்.

36-ம் நம்பர் நூல் துணி, முரட்டுத் துணி. முரட்டு வேஷ்டிகளுக்கும் துப்பட்டிகளுக்குமே அது லாயக்கு. அதற்கு தமிழ் நாட்டில் போதிய கிராக்கியில்லை.

### திட்டம் வேண்டாமா?

நம் மாகாணத்தின் துணி உற்பத்தி எவ்வளவு? அதில் மில் துணி எவ்வளவு? மாகாணத்தின் தேவை என்ன? மிச்ச துணிகளுக்கு மார்க்கட் எங்கே? எல்லாத் தறிகளுக்கும் நூல் தேவை எவ்வளவு? தட்டில்லாமல் நூல் கிடைக்க சர்க்காரிடம் தக்க திட்டங்கள் உண்டா? இன்றைக்கு சர்க்காரால் நிர்ணயிக்கப்பட்ட நூல்கோட்டாவில் ஆறிலொரு பங்கு நூல்கூட பலவிடங்களுக்குக் கிடைக்காமலிருக்கிறது. உதாரணமாக செங்கல்பட்டு ஜில்லாவுக்கு நிர்ணயித்த நூல் கோட்டா 1050 பேல்கள். மே மாதத்தில் 224 பேல் தான் கிடைத்ததாம்.

### நூலோ நூல்

கிராமாந்தரங்களில் வாழும் நெசவாளர்களைக் காப்பாற்றுவதாக வாக்குறுதி கொடுத்தது மாகாண சர்க்கார். ஆனால் அவர்களுக்கு உடனுக்குடன் சிரமமில்லாமல் நூல் கிடைக்க வழி செய்து கொடுக்கப்பட்டதா? நகரங்களிலுள்ள நூல் கடைகளை நோக்கி 50, 60 மைல்கள் வரை நடந்து வந்து நூல் வாங்கிச் செல்வது எவ்வளவு துன்பத்தைக் கொடுக்குமென்பதை சர்க்கார் சிறிதாவது சிந்தித்ததா? வந்து வாங்கும் நூல் கிரையத்தைவிட பிரயாணச் செலவு பல மடங்கு அதிகமாய் விடுவதால், நெசவுத் தொழிலையே தொழிலாளர்கள் வெறுக்க ஆரம்பித்து விட்டனர். திருக்கழுக்குன்றம் என்ற ஊரில் மட்டும் இதுவரை ரூ. 20 ஆயிரத்துக்குமேல் பிரயாண செலவுக்காக அங்குள்ள நெசவாளர்கள் செலவழித் திருக்கிறார்களென்றால் நிலைமையை ஒருவாறு ஊகித்துக் கொள்ளலாம். பொன்னேரித் தாலூகா நெசவாளர்கள் இதுவரை தாங்கள் சங்கக் காரியதரிசியின் மூலமே நூல் வாங்கி வந்தார்கள். திடீரென நூல் கமிஷனரிடமிருந்து ஒரு உத்தரவு வந்தது. ஒவ்வொரு நெசவாளியும் நேரில் வந்து நூல் வாங்க வேண்டுமாம்.

பல தறிகளுக்குச் சொந்தக்காரர்களாயுள்ள மாஸ்டர் வீவர்களால் தான் தூரவிடங்களுக்குச் சென்று நூல் வாங்கிக்கொள்ள சக்தியுண்டு ஏழைகளான தனித் தறிக்காரர்களுக்கு அந்த சக்தியில்லை. அதனால் தங்கள் தறிகளை தூர எறிந்துவிட்டு மாஸ்டர் வீவர்களிடம் அடிமையாகி கூலி வேலை செய்ய வேண்டியுள்ளது. இப்பொழுது மாஸ்டர் வீவர் தான் தனிக்காட்டு ராஜா. அவர் கொடுத்ததுதான் கூலி.

ஏழைகளின் பசிக்குரலுக்கு சர்க்கார் செவி கொடுக்க வேண்டும். நெசவாளர்கள் அதிகமாக வசிக்கக் கூடிய இடங்களில் நூல் கடைகளை திறந்து நிர்ணய விலைக்கு கிடைக்குமாறு ஏற்பாடு செய்ய முன்வர வேண்டும். நார் பட்டும் அக்கடைகளிலேயே கிடைக்குமாறு ஏற்பாடாக வேண்டும்.

# ஜெர்மன் பூமியில்

(4-ம் பக்க தொடர்ச்சி)

தின் சவரணையை விளக்க வேறு அத்தாட்சி வேண்டியதில்லை.

பொருளாதார கஷ்டங்களைத் தீர்க்கவும் அவர்களால் முடியவில்லை. உணவு நிலைமை மோசமாயிருப்பதாக அவர்கள் அறிக்கைகளே ஒப்புக்கொள்கின்றன.

* * *

பிரிட்டிஷ்–அமெரிக்க நிர்வாகத்தின் கொள்கை கிரைமியா உடன்பாட்டுக்கு முரணானது. இந்த முறை மாறி, ஜெர்மனி முழுவதும் பிரிட்டிஷ், அமெரிக்க, சோவியத் சர்க்கார்கள் ஒரே கொள்கையை அனுஷ்டிப்பது அவசர அவசியம். இதற்காகவேதான், பெர்லினில் நான்கு வல்லரசு மகாநாடு கூடிற்று. மார்ஷல் ஜுகாவ், ஐஸன்ஹோவர், மாண்ட்கோமரி, டாஸ்ஸிக்னி (பிரான்ஸ்) ஆகிய நால்வரும்கூடி ஒரு உடன்பாட்டில் கையெழுத்திட்டார்கள். கண்ட்ரோல் கவுன்ஸிலில் இவர்கள் நால்வரும் அங்கத்தினர்களாயிருப்பார்கள். ஜெர்மனியில் அவர்கள் பூர்ண அதிகாரத்தை மேற்கொண்டுள்ளார்கள்.

இந்த உடன்பாட்டின்படி, ஜெர்மன் படைகள் எல்லாம் ஆயுத பரிஹாரணம் செய்யப்பட்டு, அவர்கள் யுத்த கைதிகளாக கருதப்படுவார்கள். ஜெர்மனியின் பொருளுற்பத்தி சக்திகளும் யுத்த சாதனங்களும் நான்கு வல்லரசுகளிடம் ஒப்படைக்கப்படும்.

ஜெர்மனி நான்கு படை நிறுத்த பிராந்தியங்களாக பிரிக்கப்படும். வடமேற்கே பிரிட்டனும், தென்மேற்கே அமெரிக்காவும், மேற்கே பிரான்ஸும், கிழக்கே ரஷ்யாவும் படைகளை நிறுத்தும்.

பெர்லின் உடன்பாட்டை நடைமுறையில் நிறைவேற்றி வைத்தால், ஜெர்மனியிலிருந்து நாஜிஸத்தையும் ராணுவத் திமிரையும் வேரோடு களைந்தெறிய முடியும். ஜெர்மன் மக்கள் மனிதர்களாய் வாழசந்தர்ப்பம் ஏற்படும். அதுவே உலக சமாதானத்தை காக்கும் பாதை, ஜனநாயக ஜெர்மனி மலரும் வழி.

# சோஷலிஸத்தில் தான் சகலருக்கும் சமத்துவமுண்டு!

*சோவியத் யூனியனின் வெற்றியைக் கொண்டாட பம்பாய் சோவியத நண்பர் சங்கம் சார்பாக நடைபெற்ற கூட்டத்தில் அகில இந்திய தொழிற் சங்க காங்கிரஸின் பொதுக் காரியதரிசி N. M. ஜோஷி M. L. A. (டில்லி) பேசும்போது:*

"ஜெர்மனிமீது செஞ்சேனை பெற்ற வெற்றியே முதலாளித்வத்தைவிட சோஷலிஸ அமைப்பே மிகச் சிறந்தது என்பதை நிரூபிக்கிறது. பல்வேறு வகுப்பினர்களிடையேயும் பரிபூரண சமத்வத்தை ஏற்படுத்த முடியுமென்பதையும் சோஷலிஸம் நிரூபித்துவிட்டது. சோவியத் வெற்றிக்கு இரண்டே காரணங்கள்தான் என்பது என் அபிப்பிராயம்.

முதலாவதாக, சோவியத் ராணுவ யந்திரம் பரிசுத்தமான உன்னதமான நோக்கத்திற்காகவே போரிடுகிறது மற்றவர்களுடைய பூமியைப் பிடுங்கிக் கொள்ளவேண்டுமென்ற துர் எண்ணம் எதுவுமில்லாமல், தங்களது நாட்டின் சுதந்திரத்திற்காகவே போரிட்டனர்.

இரண்டாவதாக, யுத்தம் முடிந்த பின், தம் நாட்டிற்குள்ளே யிருந்தும் வெளியிலிருந்தும் சுரண்டல் இருக்காதென சோவியத் மக்கள் நம்பிக்கை யுள்ளவர்களா யிருப்பது தான். தங்களுடைய சர்வசக்திகளையும் யுத்த முயற்சியில் ஈடுபடுத்த அவர்கள் முன் வரும்படி உத்வேக மூட்டியது இவைகள்தான்."

# கோலார் தொழிலாளர்களின் குறைகளை நீக்கு!

## வேலைநிறுத்தம் அனைவருக்கும் கெடுதல்

*தொழிலாளர்களின் கோரிக்கைகளைக் கவனிக்க மாட்டோமென்று இறுமாந்திருந்தனர் கோலார் சுரங்க முதலாளிகள். சட்ட விரோதமான வேலை நிறுத்தத்தில் தலையிட மாட்டோமென்று பிடிவாதம் பிடித்தது மைசூர் சர்க்கார். தொழிலாளரின் அமைதியாலும், பொதுஜன நிர்ப்பந்தத்தாலும் மைசூர் காங்கிரஸ் தலைவர்கள், மைசூர் தொழிலாளர் சம்மேளனத் தலைவர் ஸ்ரீ கே. டி. பாஷ்யம் முதலியவர்களின் தலையீட்டினாலும் "மத்தியஸ்தக் கோர்ட் ஏற்படுத்தி தொழிலாளர்களின் குறைகளைத் தீர்க்கிறோம்" என்று கீழிறங்கி வந்திருக்கிறது அரசாங்கம்.*

**சீக்கிரமே இந்த கோர்ட் தன் வேலையைத் தொடங்குமென சர்க்கார் கூறுகிறது. சம்மேளனத் தலைவர் ஸ்ரீ பாஷ்யமும் ஏனைய காங்கிரஸ் தலைவர்களும் விடுத்த வேண்டுகோளுக் கிணங்கவும், நாட்டின் பொதுநலனையும் தங்களின் சொந்த நலனையும் முன்னிட்டும், தொழிலாளர்கள் தங்கள் வேலையை உடனே தொடங்க வேண்டும். ஏற்படப்போகும் மத்தியஸ்த கோர்ட்டில் தங்களின் நியாயமான கோரிக்கைகளை சரியான முறையில் சமர்ப்பிப்பதே தக்க வழியாகும். இவ்வெற்றியைச் சரியானபடி பயன்படுத்திக் கொள்ளுவதில் தொழிலாளர்கள் தவறிவிடக் கூடாது.**

வேலை நிறுத்தம் ஆரம்பித்து 3 வாரம் ஆகப்போகிறது. இந்தப் பஞ்ச காலத்தில் 1½ லக்ஷம் பேர்களடங்கிய தங்கள் அருமைக் குடும்பங்களைப் பட்டினிபோட வேண்டுமென எந்தத் தொழிலாளியும் விரும்ப முடியாது. நகரத்தின் சுகாதாரம் கெட்டு, பொது மக்கள் பாதிக்கப்படுவதையும் தொழிலாளர்கள் விரும்பவில்லை. பல தொழிற் சங்கத் தலைவர்கள் இதை யுணர்ந்துள்ளார்கள். மத்தியஸ்தக் கோர்ட் ஏற்படுத்த சர்க்கார் முன் வந்திருக்கிறது.

### தொழிலாளர்களின் நிலைமை

கடல் மட்டத்திற்கு எட்டாயிரம் அடி பாதாளச் சுரங்கங்களில்—தகிக்கும் உஷ்ணத்தின் மத்தியில் தங்கம் தோண்டும் தொழிலாளர்களின் வாழ்க்கை நிலை மிகவும் பரிதாபமானது. அவர்களது உரிமைகளைப் பறிப்பதற்கும், சட்ட பூர்வமாகக் கிடைக்க வேண்டிய சௌகரியங்களைத் தடுப்பதற்குமான பல சட்ட திட்டங்களை கம்பெனி நிர்வாகம் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறது.

தொழிலாளர்கள் பெற்று வரும் பஞ்சப்படி ரூ. 8 தான்; சுரங்கத்தின் மேல் தளத்தைச் சுத்தம் செய்யும் தோட்டித் தொழிலாளிக்கு 5 அல்லது 6 அணாதான் தினசரிக் கூலி. தோட்டிப் பெண்களுக்கோ நாலரை அணாதான். சுரங்கத்திற்கு மேல் வேலை பார்க்கும் ஏனைய தொழிலாளிகளுக்கு 9 அணாதான் கூலி. சுரங்கத்திற்கு அடியில் வேலைசெய்பவர்களுக்கு தினம் 12 அணாதான் கூலி கொடுக்கப்படுகிறது. இது அநியாயமானது, இதில் மாறுதல் ஏற்படவேண்டுமென்று தொழிற் சங்கம் கிளர்ச்சி செய்து வந்துள்ளது.

### ஸ்டாண்டிங் ஆர்டரை திருத்து

அதற்கடுத்த கொடுமை "ஸ்டாண்டிங் ஆர்டர்." இச் சட்டத்தின்படி எவ்வித காரணமும் காட்டாமல் யாரையும் வேலையைவிட்டு விரட்டிவிடலாம். "ஒரு தொழிலாளி இனிமேல் வேலைசெய்ய லாயக்கில்லை" என்று கம்பெனி டாக்டர் அத்தாட்சி கொடுத்தால்தான், அந்த தொழிலாளிக்கு கிராஜுடி (சர்வீஸ் பணம்) கிடைக்கும் என்பது மானேஜ்மெண்டின் சட்டம். இம்முறையை எதிர்த்து, ஸ்டாண்டிங் ஆர்டரை மாற்றவேண்டுமென சங்கம் கோரி வந்துள்ளது. 15 வருஷம் சுரங்கத்திற்குள்ளும், 20 வருஷம் சுரங்கத்திற்கு மேலும் வேலைசெய்து சர்வீஸ் உள்ள தொழிலாளிகள், இஷ்டப்பட்டால் தாமே விலகிக்கொள்ளவும், இஷ்டப்படாவிட்டால் மேலும் வேலைசெய்யவும் உரிமையிருக்க வேண்டுமெனவும், அதற்கான சர்வீஸ் பணமும் கொடுக்கப்பட வேண்டுமெனவும் சங்கம் கிளர்ச்சி செய்து வந்துள்ளது. நியாயமானதும் மிதமானதுமான இக்கோரிக்கையை இனிமேலும் புறக்கணிக்கும்படி விடக்கூடாது.

கிரேடு கூலியை அதிகப்படுத்த வேண்டுமெனவும் சங்கம் கோரி வந்துள்ளது. மத்தியஸ்தக் கோர்ட்டில் தொழிற்சங்கப் பிரதிநிதிகள் இவ்விஷயங்களை யெல்லாம் தெளிவாக எடுத்துரைப்பார்கள்.

### தொழிலாளர்களின் பொறுப்பு

மைசூர் அரசாங்கம் இவ்விஷயத்தில் தலையிட்டு சமரசம் பண்ண முன் வந்திருக்கிறது. சமஸ்தானத்தின் பொதுஜனத் தலைவர்கள் நம் கோரிக்கை ஞாயமானதென்பதை யுணர்ந்து நமக்கு பக்கபலமாக இருக்கிறார்கள். இவர்களனைவரும் கொடுத்துள்ள வாக்குறுதியை ஏற்றுக்கொண்டு தொழிலாளர்களனைவரும் உடனே வேலைக்குப் போக வேண்டும். இவ்விஷயத்தில் சங்கம் காட்டுகிற பாதையில் இம்மியும் பிறழாது நடந்துகொள்ளுவதுதான், நமது சக்தியை மேலும் பலப்படுத்துவதற்கும், உரிமைகளையும் கோரிக்கைகளையும் பெறுவதற்கும் உகந்த வழி. இதுவொன்றே பொதுஜன ஆதரவைப்பெற்று முதலாளிகளைப் பணியவைக்கும் வழி. மைசூரிலுள்ள சுரங்கத் தொழிற்சங்கங்கள் அனைத்தும் ஒரே கட்டுப்பாட்டுடன் இவ்வழியைப் பின்பற்றினால் கட்டாயம் தொழிலாளர்களுடைய கோரிக்கைகளுக்கு வெற்றிக் ஏற்படும்.

(4-ம் பக்க தொடர்ச்சி)

கொள்ளவேண்டுமென்றார். டாக்டர் ஸையத் மூகமது காங்கிரஸ் லீக் ஒற்றுமையினால் சட்ட சபையில் சர்க்காருக்கு தோல்விமேல் தோல்வி ஏற்பட்டதைக் குறிப்பிட்டார். இலங்கை சுதந்திரத்துக்கு இந்தியர் சகல உதவியையும் அளிக்கவேண்டுமென்று கூறினார். இந்தியாவில் பஞ்சம் தலைவிரித் தாடியபோதிலும் இலங்கைக்கு உணவளித்து இந்தியா உதவியதைக் குறிப்பிட்டு, சிங்களர்க்கும் இந்தியர்க்கும் பரஸ்பர ஒற்றுமை ஏற்பட்டு வளரவேண்டுமென்றார்.

### தவறான செய்தி

நான் பேசியபொழுது சில கம்யூனிஸ்டுகள் எழுந்து "காங்கிரஸ்-முதலாளி ஸ்தாபனம்" என்று கூச்சலிட்டதாக ஒரு செய்தி சென்னைப் பத்திரிகைகளில் வெளியாயிருக்கிறது. நான் பேசுகிறபொழுது கூச்சலிட்டவர்கள் இலங்கை சமசமாஜ கட்சி வாலிபர்கள். காலேந்துபேரிருக்கும். அவர்கள் கம்யூனிஸ்டுகளல்ல. கம்யூனிஸ்டு கட்சி வேறு, சமசமாஜக் கட்சி ட்ராட்ஸ்கியவாதிகளடங்கியது. தினமணியில் "காங்கிரஸுக்கு எதிராக கம்யூனிஸ்ட் கோஷங்கள்" என்று பிரசுரித்திருப்பது தவறு.

இலங்கை இந்தியர் லேபர் யூனியனில் சிங்களர் சேரமுடியாது. தொழிலாளிகள் நிலைமை உயரவேண்டுமென்றால் ஒன்றுபட்ட தொழிலாளர் ஸ்தாபனம் வேண்டுமென்பதே இலங்கையில் நான் கண்டு பேசிய இலங்கையருடைய அபிப்பிராயமும். இலங்கை இந்தியர் காங்கிரஸ் பரிபூர்ணமாக இலங்கையருடைய சுதந்திரக் கோரிக்கையை ஆதரித்து வேலை செய்கிறதென்று நம்பிக்கையும் ஏற்படவேண்டும். இலங்கை இந்தியருடைய உரிமைகளை நாம் காப்பதற்கு இலங்கையர் நம்பிக்கையைப் பெறவேண்டும். இங்கு நாம் நம் தேசத்தவர்களுக்காக நடத்தும் கிளர்ச்சியுடன்: ஏகாதிபத்திய ஆட்சி மாற்றி அமைக்கப் படுவதற்கும் கிளர்ச்சி செய்யவேண்டியது அவசியமாகிறது.

# கூட்டு மந்திரி சபை வேண்டும்

## சேலம் மில் தொழிற்சங்க ஆண்டு விழா

சென்ற மாதம் 27-ந் தேதி சேலம் மில் தொழிலாளர் சங்கத்தின் ஆண்டு விழா, தென்னிந்திய ரயில்வே தொழிற் சங்கத்தின் தலைவர் தோழர் ஜே. பி புருஷோத்தம் தலைமையில் நடைபெற்றது. மாக்னிஸைட் தொழிலாளர்கள், மில் தொழிலாளர்களடங்கிய பெரும் ஊர்வலம் நடைபெற்றது. தோழர் கே பாலதண்டாயுதம் செங்கொடி ஏற்றினார். காங்கிரஸ் தலைவர் ஸ்ரீமான் எம். ஜி. வாசுதேவய்யா தம் திறப்பு விழாப் பிரசங்கத்தில், "ரஷ்யாவில் தொழிலாளர்கள் முயற்சித்தார்கள். சுதந்திரம் பெற்றார்கள். நீங்களும் முன் வந்தால் சுதந்திரம் நிச்சயம். காங்கிரஸ் மகாசபை உங்களுக்காக பெரிதும் உழைக்கும்" என்றார்.

### தீர்மானங்கள்

(1) கூட்டு மந்திரி சபை அமைத்து மக்கள் கஷ்டத்தை நிவர்த்திக்க வேண்டும்.

(2) கோவை மில்களின் சம்பள அளவு கொடுக்கப்படவேண்டும்.

(3) நீக்கப்பட்ட தொழிலாளர்களை வேலைக் கெடுத்துக் கொள்ள வேண்டும்.

(4) மில் சங்கத்தை மானேஜ்மெண்டு அங்கீகரிக்க வேண்டும்.

இன்னும் பலதீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

அன்று மாலை மூவாயிரம் பேரடங்கிய பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள்: தெய்வம், எஸ். எம். ராமய்யா, பாலதண்டாயுதம் முதலியோர் பேசினர்.

## குடியாத்தம் டைக்ஸ்டைல் தொழிற்சங்க ஆண்டு விழா

மே மாதம் 27-ந் தேதி தோழர் D. R. கோபாலன் தலைமையில் ஆண்டு விழா நடைபெற்றது.

குடியாத்தம் சில்க் மில் தொழிலாளர் சங்கத்தை டெக்ஸ்டைல் தொழிற் சங்கத்துடன் சேர்க்க வேண்டுமெனவும், கோவை மில் சம்பள விகிதமும், லீவ் வசதிகள், கோவாப்ரேடிவ் ஸ்டோர், பிராவிடெண்ட் நிதி, பெண் தொழிலாளிக்கு பிரசவ நிதி ரூ 40, சர்விஸிற்கு ஏற்றாற்போல வேலை, டாக்டர் வசதி முதலியன வேண்டுமெனத் தீர்மானிக்கப்பட்டது.

### பொதுக்கூட்டம்

அன்றுமாலை 6000 பேர் கொண்ட பொதுக்கூட்டம் தோழர் டி. வி. கிருஷ்ணன் தலைமையில் நடைபெற்றது. தோழர்கள்: பாலச்சந்திர மேனன், புதுச்சேரி வி. சுப்பையா, கோவை. கே. ரமணி முதலியவர்கள் பேசினார்கள்.

தலைவர்கள் விடுதலை, கூட்டு மந்திரி சபை, கள்ளமார்க்கெட் ஒழிப்பு தேசிய சர்க்கார் பற்றிய தீர்மானங்கள் நிறைவேறின.

மதுரையில்

# ஹிட்லர் ஆட்சி!

## 'டிஸ்மிஸ்' படலம் ஆரம்பம்!

*ஐரோப்பாவில் ஹிட்லரிஸம் வீழ்ச்சியடைந்துவிட்டது; பெர்லின் நகரத்தில் செங்கொடி பறக்கிறது. பிரிட்டனிலேயே தொழிற்கட்சி, பிரதான தொழிற்சாலைகளை முதலாளிகளின் ஆதிக்கத்திலிருந்து விடுவித்து, தேசத்தின் கையில் ஒப்படைக்கும் திட்டத்தை வைத்துத் தேர்தலுக்கு நிற்கிறது.*

*நமது தேசத்திலோ, இந்த சமயத்தில், ஹிட்லரிஸம் தோன்றி, தொழிலாளிவர்க்கத்தை, அவர்களுடைய ஸ்தாபன உரிமையை—பறிமுதல் செய்யப்பார்க்கிறது. மதுரையிலும், விக்கிரமசிங்கபுரத்திலும் உள்ள ஹார்வி மில்களில் தான் இந்த ஹிட்லர் தர்பார் இன்று வெகு ஜரூராக நடைபெற்று வருகிறது.*

திடீரென்று சென்ற 4ந் தேதியன்று, 7 தொழிலாளிகளை மதுரையில் 'டிஸ்மிஸ்' செய்தது இந்த நிர்வாகம்; மறுநாள், ஐந்து தொழிலாளிகள் டிஸ்மிஸ்! அதற்கு மறுநாள் மற்றும் ஐவருக்குச்சீட்டுக் கிழிக்கப்பட்டது.

நீண்டகாலத்திய சர்வீஸையுடைய தொழிலாளிகள். வேலையில் ஏதாவது தவறு செய்தார்களா? அல்லது, ஏதாவது சண்டை சச்சரவுகளில் ஈடுபட்டார்களா? இல்லை! இவர்கள் டிஸ்மிஸ் செய்யப்பட்டதெல்லாம், ஒரு புது 'ஸ்டாண்டிங் ஆர்டர்' பிரகாரம் என்று மில் மானேஜர் கூறுகிறார்.

### தொழிற்சங்கமல்ல கங்காணி சங்கமே

1938 முதல், இந்த நிர்வாகம், எஸ். ஆர். வரதராஜுலு நாயுடு என்பவரால் நடத்தப்பட்ட ஒரு சங்கத்திற்கு மதுரையிலும், பாபநாசத்திலும் 'அங்கீகாரம்' அளித்திருக்கிறது. இந்த "சங்கத்தை"ப்பற்றி, இன்று மாகாணம் பூராவும் தெரியும். இதை ஒரு தொழிற்சங்கமென்று அழைக்கமுடியாது. முதலாளியின் கங்காணி ஆபீஸாகவே இது இருந்து வந்திருக்கிறது.

தேர்தல் என்ற வழக்கமே கிடையாது. மில்லுக்கு வேலைக்குச் சேர வேண்டுமானால், இந்த 'சங்க'த்தின் மூலமாகத்தான் சேரலாம். ஆள் சேர்ப்பதற்காக நிலவி வந்த லஞ்சம்

பி. ராமமூர்த்தி

சொல்லி முடியாது. என்னென்ன வகையிலெல்லாம், தொழிலாளிகள் திண்டாடினர்! எதிர்த்துக்கேட்டால், உடனே அடி, உதை, டிஸ்மிஸ்! முதலாளி எந்த திட்டத்தைக் கொண்டுவந்தாலும் அதை ஆமோதிப்பதுதான் இந்த சங்கத்தின் வேலை. அதற்காகவே, இந்த அங்கீகாரம்! உதாரணமாக, 1938ல், ஒரு ஸைட் பார்த்துவரும் ஸ்பின்னர்களை இரண்டு ஸைட் பார்க்கவேண்டுமென்ற திட்டம் முதலாளியால் கொண்டுவரப்பட்டது. இந்த அதிகப்படியான வேலைக்கு, அதிகச் சம்பளம்கூடக் கிடையாது. ஆனால், ஒத்தூதுகிற கங்காணி இருக்கிற வரையில், முதலாளி எதற்குக் கவலைப்படவேண்டும்? இந்தத்திட்டம், இந்தியாவிலேயே எங்கும் கண்டிராத வகையில், தொழிலாளிகளின்மீது திணிக்கப்பட்டது.

### கணக்கு காட்டாதவனுக்கு கருணை காட்டப்பட்டது

1939ல் காங்கிரஸ் சர்க்காரால் விசாரணைக்கோர்ட்டாக நியமிக்கப்பட்ட மிஸ்டர் டி என். ஸ்ட்ராத்தி (இப்பொழுது சென்னை கவர்னரின் பிரதம ஆலோசகர்) "இந்த சங்கம் ஒரு தனிப்பட்ட எஸ். ஆர். வரதராஜுலுவின் நாடகம் என்பதில் உண்மை யிருக்கிறது. சங்கம் ஜனநாயக முறையில் நடப்பது கிடையாது. கணக்குகள் சரிவர வைத்துக்கொள்ளப்படவில்லை." என்று கூறி, சில சிபார்சுகளைச் செய்தார் ஆனால், அவைகளைப்பற்றியா வரதராஜுலு நாயுடுவா கவனிப்பவர்? மிஸ்டர் டோக்கின் தயவு உள்ள வரையில், யார் நம்மை என்ன செய்யமுடியும் என்ற இறுமாப்பிலிருந்தார். வேடிக்கை என்னவென்றால், லேபர் கமிஷனரும் எந்தவித நடவடிக்கையும் எடுக்காமலிருந்ததுதான்! கணக்குகள் பலவருஷங்களாக ஆடிட் செய்யாமலிருந்த போதிலும், சட்டப்படி அனுப்பப்படவேண்டிய வருஷாந்திரக் கணக்குகள் அனுப்பாமலிருந்தபோதிலும் லேபர் கமிஷனர் எவ்வித நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளாமலேயே இருந்தார். எல்லாம், மிஸ்டர் டோக்கின் செல்வாக்கின் விளைவுதான் போலும்!

### அடக்குமுறைக்கா அஞ்சுவோம்?

இந்த சங்கத்தை ஒழுங்காக நடத்த எல்லாச் சீர்திருத்த முயற்சிகளும் பயனற்றுப் போகவே, விக்கிரமசிங்கபுரத்துத் தொழிலாளிகள் சங்கம் ஒன்றை ஆரம்பித்து, அதை ரிஜிஸ்டரும் செய்துகொண்டனர். ஆரம்பத்திலேயே, அதாவது, 1940லேயே, இந்த சங்கத்தின் முக்கிய ஊழியர்கள் டிஸ்மிஸ் செய்யப்பட்டனர். பிறகு சிறைவாசமும் கூட அவர்களுக்குக் கிடைத்தது.

இந்த அடக்குமுறையைக் கண்டா தொழிலாளிவர்க்கம் பயந்துபோய் விடும்? நீண்ட போராட்டத்தின் பலனாக, இன்று விக்கிரமசிங்கபுரம் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம் 5,000க்கு மேற்பட்ட அங்கத்தினர்களைக்கொண்டதாக வளர்ந்திருக்கிறது. மீண்டும் அடக்குமுறை; 1943ல் பல தோழர்கள் இங்கு 'டிஸ்மிஸ்' செய்யப்பட்டனர். இவர்களை 'டிஸ்மிஸ்' செய்வதற்காகவே மேலே கூறிய 'ஸ்டாண்டிங்' ஆர்டர் போடப்பட்டது.

மதுரைத் தொழிலாளிகளும் உணர்ச்சிகொண்டு எழுந்தனர். சென்ற வருஷத்தில் அங்கேயும், ஒரு சங்கம் ஏற்பட்டது. 6,000க்கு மேற்பட்ட அங்கத்தினர்களைக் கொண்டதாக வளர்ந்தது.

இதற்கிடையே, விக்கிரமசிங்கபுரத் தொழிலாளர்கள், வரதராஜுலு நாயுடுவின்மீது வழக்குத் தொடர்ந்தனர். 15,000 ரூபாய், தொழிலாளிகளிடமிருந்து வசூல் செய்த பணத்தை, 'அபேஸ்' செய்துவிட்ட குற்றத்திற்காக, 1½ வருஷ கடுங்காவலும், 1,000 ரூபா அபராதம் விதிக்கப்பட்டு, அப்பீலில் ஜில்லா கோர்ட்டிலும், ஹைகோர்ட்டிலும், அந்த தண்டனை ஊர்ஜிதம் செய்யப்பட்டது.

சென்னையிலிருந்து, ஒரு வக்கீலைப் பிடித்துவந்து, தன்னுடைய ஸ்தானத்தில் அமர்த்திவிட்டு, இவர் சிறைக்குச் சென்றார்.

**பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம், சும்மா இருக்கிறதா? மில்லிலுள்ள நிர்வாக ஊழல்களை அம்பலத்திற்கு இழுக்கிறது. துணியும், நூலும இல்லாமல் ஜனங்கள் கஷ்டப்படும்போது மதுரை மில்லில் 125 மெஷின்கள் தினசரி இரவு ஷிப்டில் நிறுத்தப்படுவதை எதிர்த்துக் கிளர்ச்சி செய்கிறது.**

கோஆபரேடிவ் ஸ்டோரை ஒழுங்காக நடத்தக் கிளர்ச்சி செய்கிறது. அதற்குத் தேர்தல் நடத்தவேண்டும் என்று, தொழிலாளிகளைத் திரட்டிற்று. தேர்தலில், நிற்பதற்காக 3 தோழர்களை பகிரங்கப் பொதுக் கூட்டத்தில் தேர்ந்தெடுத்தது. ஸ்டோர் ஊழல்களைச் சீர்படுத்த யோசனை கூற 4 பேர்களைக் கொண்ட கமிட்டியும் தேர்ந்தெடுக்கப்பட்டது.

**இதுதான் தாமதம் இந்த 7 பேர்களையும், 4ம் தேதியன்று டிஸ்மிஸ் செய்தது. தொடர்ந்து மற்றவர்களையும் டிஸ்மிஸ் செய்துவருகிறது. விக்கிரமசிங்கபுரத்தில் உபயோகிக்கப்பட்ட அதே ஸ்டாண்டிங் ஆர்டர் இங்கும் அமுலுக்குக் கொண்டுவரப் பட்டதாம்!**

### ஸ்டாண்டிங் ஆர்டர்

இந்த 'ஸ்டாண்டிங் ஆர்டர்' என்ன கூறுகிறது?

"அரசியல் அல்லது வகுப்புவாதக் கலப்பற்ற ஒரே சங்கத்தை அங்கீகரிப்பதுதான் மானேஜ்மெண்டின் கொள்கை. தற்சமயம் அங்கீகரிக்கப்பட்டுள்ள சங்கம் மதுரை லேபர் யூனியன் (வரதராஜுலு கங்காணி ஆபீஸ்) மேற்கூறிய கொள்கைக்கு விரோதமாக எந்தத் தொழிலாளி யாவது நடந்துகொண்டால், ஒழுங்கீனமாக நடந்துகொண்ட குற்றம் செய்தவனாகக் கருதப்பட்டு வேலையிலிருந்து டிஸ்மிஸ் செய்யப்படலாம்." இதுதான் அந்த ஸ்டாண்டிங் ஆர்டர்!

முதலாளியாய் நியமிக்கப்பட்ட 'தலைவனை' ஒத்துக்கொள்ளவேண்டும். வேறு தொழிற்சங்கங்கள் நிறுவக்கூடாது, என்ற சட்டம், ஜெர்மனியில் ஹிட்லர் ஆதிக்கத்துக்கு வந்தவுடன் அமுலுக்கு வந்தது. அந்த நாஜி சட்டத்திற்கும், இந்த ஸ்டாண்டிங் ஆர்டருக்கும் ஏதாவது வித்தியாசமிருக்கிறதா?

இந்தியத் தொழிலாளி வர்க்கம், நீண்ட நெடுங்காலத்திய போராட்டங்களுக்குப் பிறகு, அரசியல் உரிமைகளைப் பெற்றது. சங்கம் வைத்துக்கொள்ளும் உரிமையையும் பல ஆயிரக்கணக்கான மக்களின் தியாகத்தினால் பெற்றது. அந்த உரிமையை மதுரை மில் நிர்வாகம் பறிமுதல் செய்ய முயற்சிக்கிறது.

காங்கிரஸ் மகாசபை, கராச்சி திட்டத்தில், தொழிலாளர்களுக்கு அளித்த உரிமை, தொழிற்சங்க உரிமை, முஸ்லிம் லீகும், இந்த உரிமையை வழங்கியுள்ளது. நம் தேசத்து தலைசிறந்த ஸ்தாபனங்கள் வழங்கியுள்ள உரிமையைப் பறி

(8-ம் பக்கம் பார்க்க)

# ஜப்பானை விரட்டும் வீரர்களை எதிர்க்கிருர் சியாங்-கே-ஷேக்!

## அமெரிக்க சர்க்கார் ஒத்து ஊதுகிறது!

முந்திய வாரத்தில், சீனவில் அமெரிக்க சர்க்காரின் கொள்கையைப் பிரசுரித்திருந்தோம். சியாங்கே ஷேக்கின் சர்வாதிகார ஆட்சிக்கு, அமெரிக்க ஸ்தானதிபதியும் தளகர்த்தரும் ஆதரவளித்து நிற்கின்றனர் என்றும் அதனலேயே கம்யூனிஸ்டுகளுடன் சமரசம் செய்துகொள்ள கோமிண்டாங் கட்சி மறுக்கிறதென்றும், ஜப்பானியரை முறியடிப்பதற்கு காலதாமத மேற்படுகிறதென்றும், அமெரிக்காவில் பிரசுரமாகும் "அமரேஷியா" என்ற பத்திரிகை பிரசுரித்திருந்தது.

இப்பொழுது அதன் கூட்டு ஆசிரியர்களான பிலிப் ஜாகப்ஜாபி என்பவரையும், கேட் லூயி மிட்செல் என்பவரையும், சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் இருவரையும் அமெரிக்க சர்க்கார் கைது செய்திருக்கிறது.

"அமரேஷியா" என்ற இந்தப் பத்திரிகை அமெரிக்காவிலுள்ள முற்போக்கு பத்திரிகைகளில் ஒன்று. ஆசியாவில் நடக்கும் சுதந்திர இயக்கங்களுக்கு முழு ஆதரவு கொடுத்து எழுதி வருகிறது. இந்திய சுதந்திரத்தை ஆதரித்து எழுதுவதுடன், இந்திய மக்களின் கோரிக்கையை—வாதத்தை—அமெரிக்கருக்கு அநேக தடவை அப்படியே எடுத்துக்கூறி யிருக்கிறது. அதேபோல், சீன மக்களின் விடுதலைக்கும் பேருதவிசெய்து வந்திருக்கிறது.

அதன் ஆசிரியர்களைக் கைதுசெய்யும் போது, "அதில் வெளி வந்த செய்தி ராஜாங்க ரகசியம்" என்று அமெரிக்க சர்க்கார் கூறுகிறது. இதிலிருந்து அதில் வெளிவந்த செய்தி முற்றிலும் உண்மை என்று விளங்கும்.

### சியாங்-அமெரிக்க சதி

ஜன நாயகக் கூட்டு சர்க்காரை அமைக்க சியாங்கே ஷேக்கும், அவருடைய கௌமிண்டாங் கட்சியும் மறுத்து வருகிருர்கள். இராணுவப் பயிற்சியில் முற்றிலும் தேர்ந்த பெரிய பட்டாளத்தை ஜப்பானியரை எதிர்த்து சண்டை செய்வதற்கு அனுப்பாமல், வடக்கு சீனவிலிருக்கும் கம்யூனிஸ்டு கொரில்லாப் படைகளை—ஜப்பானியரை எதிர்த்து முறியடித்து வரும் வீரர்களை—கண்காணிக்கவும், தாக்கி ஒடுக்கவும் சியாங்கே ஷேக் உபயோகித்து வருகிருர்.

அமெரிக்க சர்க்கார் இந்தக்கொள்கைக்கு ஆதரவு கொடுத்து, இரவல் குத்தகை மசோதாவின் மூலம், சியாங்கே ஷேக்கிற்கு ஆயுதங்களையும் சப்ளை செய்து வருகிறது. "இந்த ஆயுதங்களை ஜப்பானியரை எதிர்க்கவே நாங்கள் உபயோகிக்கிரோம்; கம்யூனிஸ்டுகளை எதிர்க்க அல்ல" என்று சீன யுத்த மந்திரி கூறுகிருர். "அப்பன் குதிருக்குள் இல்லை!" என்று கூறுகிருர்!

### கம்யூனிஸ்டுகளுடன் சண்டை

அதே தினத்தன்று வந்த இன்னெரு செய்தி கூறுகிறது, கம்யூனிஸ்டு கொரில்லாப் படைகளின் தளகர்த்தர்கள் இருவரை, சியாங்கே ஷேக்கின் ஆட்கள் தூக்கிலிட்டனர் என்று! அவர்களில் ஒருவர், 1938ல் ஷாங்காய் நகரத்தை ஜப்பானியரிடமிருந்து பாதுகாத்து வீரப்போர் ஆற்றிய, 19-வது படையின் தளகர்த்தர்.

இதோடு, "கம்யூனிஸ்டு படைகளுக்கும் கோமிண்டாங் படைகளுக்குமிடையே கைக்கலப்புகள் ஏற்பட்டிருக்கின்றன" என்று சீன யுத்த மந்திரி ஒப்புக்கொள்கிருர்.

ஜப்பானை முறியடிப்பதற்கு எல்லா சக்திகளும் ஒன்று திரட்டப்பட வேண்டிய சமயத்தில், ஜப்பானியர் கண்டு நடுங்கும் மிகப்பெரிய சக்தியை—கொரில்லாப் படைகளை—அழிப்பதில் கோமிண்டாங் கவனம் செலுத்துகிறது! ஜனங்களுக்கு ஜனநாயக உரிமைகளைமறுக்கிறது. ஜப்பானியரைவிட சீன மக்களின் சக்தியைக் கண்டு பயப்படுகிறது! அதை ஒடுக்குவதில் முனைகிறது.

### இன்னெரு செய்தி

"அமரேஷியா"வில் இந்தவாரம் கீழ்க்கண்ட செய்தி வெளியாகியிருக்கிறது:

"ஏற்கனவேயே கொரில்லா சண்டைகள் மூலம் ஜப்பானியரை விரட்டி தங்களுடைய ஜனநாயக சர்க்காரை சீனமக்கள் ஆங்காங்கே ஏற்படுத்தி இருக்கிருர்கள். அந்த ஜன சர்க்கார்களை எப்படி உடைத்து, கோமிண்டாங் ஆட்சியை அங்கு நிலைநாட்டுவது என்று, அமெரிக்க சேனைகளில் ஒரு பகுதிக்கு பயிற்சி அளிக்கப்படுகிறது. ஆசியாவில் சமாதானத்தை ஏற்படுத்தும்போது, ஜனநாயக சக்திகளை வளரவிடாமல் தடுக்கும்படியான சமாதானத்தை ஏற்படுத்த பிற்போக்குக் கும்பல்கள் நினைக்கின்றன. ஆசியாவில் வளரும் எல்லா ஜனநாயக சுதந்திரசக்திகளுக்கும் எதிரான ஒரு சீனசர்க்காரை (கோமிண்டாங் ஆட்சியை) ஏற்படுத்த அவர்கள் நினைக்கிருர்கள்."

இவர்கள் இவ்விதம் உள் நாட்டு யுத்தத்திற்கு அடிகோலிய போதிலும், ஜப்பானியரை விரட்டியடிப்பதில் கம்யூனிஸ்ட் படைகள் கொஞ்சங்கூட சளைக்கவில்லை. ஏற்கனவேயே, ஒன்பதுகோடி மக்களை விடுவித்திருக்கிருர்கள். இப்பொழுது அவர்களுடைய போராட்டம் வலுத்து வருகிறது. நமக்கு வரும் செய்திகளில் அவை யெல்லாம் மறைக்கப்படுகின்றன.

# தெற்கே வாபஸ், வடக்கே சண்டை!

## தோல்வியைத் தவிர்க்க ஜப்பான் திட்டம்

ஓகினுவா தீவில் ஜப்பானியர்கள் மூர்க்கத் தனமாக போராடுகிருர்கள். ஜப்பானிலிருந்து 350 மைலிலுள்ள இந்த தீவு ஒரு கேந்திர ஸ்தலம். அதில் பாதுகாப்பு முஸ்தீபுகள் பலமாக செய்திருக்கிருர்கள்.

ஓகினுவா அமெரிக்கர் வசமாகிவிட்டால், அங்கிருந்து அமெரிக்க கோட்டைகள் ஜப்பானை நிர்த்தூளி பண்ண முடியும். சீனவிலோ, ஜப்பானிலோ அமெரிக்க படைகள் இறங்கினலும், அந்த படைகளுக்கு அது சப்ளை தளமாக விருக்கும்.

அதனல் தான் ஜப்பானியர்கள் விடாக்கண்டன் கொடாக்கண்டன்களாக சண்டை செய்கிருர்கள். ஜப்பானியர் புதிதாகக் கண்டு பிடித்திருக்கும் ரகசிய ஆயுதம், தற்கொலை விமானம், உபயோகிக்கப்படுகிறது.

### ஓகினுவா போச்சு?

ஆனல் பிடிவாத எதிர்ப்பால் பலன் ஒன்றுமில்லை. ஜப்பானியர் நஷ்டமும் பெருகிவிட்டது. ஓகினுவை இழப்பதும் இன்ருே நாளையோ என்ருகி விட்டது. அதனல் தான் ஓகினுவா சண்டை ஜீவ மரணப் போராட்டம் என்று சொல்லி வந்தவர்கள், "ஓகினுவா போராட்டம் நம் தாய்நாட்டின் தலைவிதியையே நிர்ணயிக்கப் போவதாக நாம் கருதவே இல்லை" என்று (ஜப்பானிய செய்தி ஸ்தாபனம்) சொல்லுகிருர்கள்.

இதே சமயத்தில், அமெரிக்க பறக்கும் கோட்டைகள் ஓஸாகா (தொழிற் சாலைகள் நிறைந்த நகரம்) டோக்கியோ, முதலிய நகரங்களை சுட்டெறிக்கின்றன. "டோக்கியோவை பரிபூர்ணமாக திரும்பக் கட்டவேண்டும்" என்று ஜாப் பிரதமர் கூறுகிருர். "மத்திய சர்க்காருடன் தொடர்பு விட்டுப் போனலும் ஸ்தல அரசாங்கங்கள் தாங்களாகவே, சுயேச்சையாக, நிர்வாகம் நடத்தும்" என்று சொல்லவேண்டிய நிலைமைக்கு டோக்யோ ரேடியோ வந்துவிட்டது.

### புதிய சூழ்ச்சி

இதே சமயத்தில், ஜப்பானிய உள் நாட்டு நெருக்கடி மோசமாகி வருகிறது. "ஜப்பானிய ஏகாதிபத்தியவாதிகளின் ஆக்கிரமிப்பு யுத்தத்தில் வெற்றி ஏற்படாதென்பதை பல ஜனப்பகுதிகள் உணர ஆரம்பித்திருக்கின்றன" என்று சோவியத் சஞ்சிகை, யுத்தமும் தொழிலாளி வர்க்கமும், எழுதுகிறது.

இந்த அதிருப்தியைத் தணிக்க புது முயற்சிகள் செய்யப்படுகின்றன. பழைய பாஸிஸ்ட் ஸ்தாபனங்கள் கலைக்கப்படுகின்றன. ஜப்பானிய அரசியல் ஸ்தாபனம் என்ற புதிய ஸ்தாபனம் பிறந்திருக்கிறது.

நேசநாடுகளுடன் சரணகதி அடைய டோனிட்ஸ் கூட்டத்தை பாஸிஸ்ட்டுகள் பதவியிலமர்த்தியது போல, இங்கும் "நிதானஸ்தர்களை" "மிதவாதிகளை" பதவிகளி லமர்த்துகிருர்கள். அங்கு, டோனிட்ஸ் சோவியத் எதிர்ப்பு கூச்சல்போட்டு,

**எஸ். ராமகிருஷ்ணன்**

மூவல்லரசு ஒற்றுமையைச் சிதைக்கப் பார்த்தான். இங்கும், நேச தேச சக்திகளைப் பிரித்து, ஜப்பானிய பிற்போக்கு வாதிகள் தற்காத்துக்கொள்ளப் பார்க்கிருர்கள்.

### தெற்கே வாபஸ்

இந்த கொள்கைதான் ராணுவ நடவடிக்கைளிலும் பிரதிபலிக்கிறது. கடந்த இரண்டு வாரங்களில், ஜப்பானியர் தென்சீனவிலிருந்துவாபஸ் வாங்குகிருர்கள். சிங்கப்பூர்—மஞ்சூரியா பாதையிலிருந்த நான்னிங், சீகியாங் முதலிய நகரங்களை கைவிட்டுவிட்டனர். இந்தோசீன, பர்மா, ஸையாமிலுள்ள ஜாப் படைகள் தப்ப வழியில்லாமல், போய்விட்டது.

இது கோமிண்டாங் படைகளின் சாமர்த்தியத்தாலல்ல. 7 வருஷங்களாக தோல்வியுற்று வந்திருக்கும் கோமிண்டாங் படைகள் இன்றுதிடீறென்று வீரர்களும் திறமைசாலிகளும்கொண்ட படைகளாக மாறிவிடவில்லை. ஜப்பானியர்கள் இந்த நகரங்களை விட்டுவிட்டுப் போகிருர்கள்; கோமிண்டாங் படைகள் காலி நகரங்களை வசப்படுத்துகின்றன.

"இங்கு நிலவும் அதிகாரபூர்வமான ஏகமனதான அபிப்பிராயம் என்னவென்ருல், ஜப்பானியர்கள் யாங்க்ட்ஸி நதிக்கும், மஞ்சள் நதிக்கும் வடகரைக்கு வாபஸ் வாங்கப் போகின்ருர்களென்பதே"—என்று ராய்ட்டர் நிருபர் கூறுகிருர்.

### வடக்கே எதிப்பு

ஜப்பானியர் திட்டமென்ன? பிரதான சேனைகளை வட சீனவுக்குக் கொண்டுபோய், அங்குள்ள எட்டு லட்சம் கம்யூனிஸ்ட் துருப்புகளை எதிர்ப்பதில் முழுகவனமும் செலுத்துவது. இரண்டாவது சோவியத் தலையிட்டால், அதை எதிர்க்க ஆயத்தமாயிருப்பது.

பர்மா, பஸிபிக் தோல்விகளுக்குப் பிறகு, ஜப்பானியர் எந்தவிடத்திலும் தாக்கவேயில்லை. அதன் காரணமும் இதுதான். தங்கள் படைகளை அவர்கள் சிதறடிக்க விரும்பவில்லை. மஞ்சூரியாவிலும், வடசீனவிலும் தங்கள் சக்திகளை குவித்துக் கொள்கிருர்கள்.

கோமிண்டாங் சர்வாதிகாரிகளின் சோவியத் எதிர்ப்பு, கம்யூனிஸ்ட் விரோத மனப்பான்மையை பயன்படுத்திக் கொள்ளலாம், சீன கம்யூனிஸ்டுகளை ஒழிக்கும் போரில் கோமிண்டாங் பராமுகமா யிருக்கும், அப்புறம் கோமிண்டாங்குடன் சமரஸம் செய்து கொள்ளலாம்—இதுதான் ஜாப் திட்டம்.

கோமிண்டாங்கின் போக்கும் அமெரிக்க கொள்கையும் இந்தஜாப் திட்டத்துக்கு பேருதவியாயிருக்கிறது. விவரத்திற்கு பக்கத்திலுள்ள கட்டுரையைப் படியுங்கள்.

(2ம் பக்கத் தொடர்ச்சி)

விவாதிக்கக்கூடாது என்று கூறும் பிரச்னையை விவாதித்து முடிவுகட்ட ஆரம்பித்தால் பரஸ்பர சந்தேகமும் பகையும்தான் வளரும். இன்றைக்கு எந்த அளவுக்கு பெரிய நாடுகளுக்குள்ளே ஒற்றுமை இருக்கிறதோ அந்த அளவுக்குத்தான் சமாதானம் நிலைத்திருக்கமுடியும் என்பது தெளிவு. மேலும் ஒருதகராறில் சம்பந்தப்பட்ட நாடு பந்தோபஸ்து கவுன்ஸில் முன்னல் தன்னுடைய கட்சியை எடுத்துக் கூறமுடியும் என்ற நம்பிக்கையைப் பெறவேண்டும்.

சோவியத் யூனியன் கூறிய வாதத்தை ஏற்றுக்கொள்ளாவிட்டாலும் ஐந்து பெரியநாடுகளும் இவ் விஷயத்தில் ஒரு உடன்பாட்டுக்கு வந்துவிட்டனர். "பந்தோபஸ்து கவுன்ஸில் முன்னல் ஒரு தகராறு வருவதை கவுன்ஸில் அங்கத்தினர் ஒருவர்மட்டும் தடுக்கும் அதிகாரத்தைப் பெறமுடியாது. அதேசமயத்தில் தகராறில் சம்பந்தப்பட்ட நாடுகளின் கட்சியை அவை எடுத்துரைப்பதையும் தடுக்கமுடியாது" என்று பிரிஸ்கோ அறிக்கை கூறுகின்றது.

காலனிகள் விஷயத்திலும் சோவியத் யூனியன் அவற்றிற்கு சுதந்திரம் அளிக்கப்படும் என்பதை தெளிவாகக் குறிப்பிட வேண்டுமென்று கூறிற்று. பிரிட்டனும் அமெரிக்காவும் 'சுதந்திரம் அல்லது சுய ஆட்சி' என்று குறிப்பிடத் தயாராயிருந்தனர். சுதந்திரமா சுய ஆட்சியா என்பதை சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில் முடிவு செய்ய வேண்டுமென்றது சோவியத். கடைசியாக 'அந்த நாட்டு ஜனங்கள் எவ்வித நிர்ப்பந்தமுமின்றி அவர்கள் விருப்பப்படி முடிவு செய்யும் சுதந்திரத்தையோ, சுய ஆட்சியையோ காலனிகளுக்கு அளிக்கவேண்டும்" என்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

### உடன்பாடும் நம் பொறுப்பும்

மேற்கூறிய இரண்டு விஷயங்களிலும் வல்லரசுகளுக்குள் வித்தியாசங்கள் இருப்பது வாஸ்தவம். ஆனல் ஒரு குறிப்பிட்ட அளவுக்கேனும் அவைகளிடையே இன்றைக்கு உடன்பாடு ஏற்பட்டிருப்பதை நாம் கவனிக்கவேண்டும். சமாதான ஸ்தாபனம் ஒன்று அமைக்கப்பட வேண்டும்; அதற்கான சாஸனம் தயாரிக்கப்பட வேண்டும்; அதில் பெரிய நாடுகள் பூனையும் எலியையும்போல் நிற்காமல் ஓரளவுக்கேனும் ஒருமுகமான முடிவுக்கு வர வேண்டும் என்பதைக் காணலாம்.

இந்த சமாதானத்தை உறுதியாக்குவது அந்தந்த நாட்டு மக்களின் பொறுப்பு. "சமாதான ஸ்தாபனமா—அது ஏகாதிபத்திய வல்லரசுகள் பங்கு போட்டுக்கொள்ளும் முறை" என்று ஏளனம் செய்துகொண்டிருப்பது சுலபம். ஆனல் அந்தந்த நாட்டு சர்க்கார் ஏற்றுக்கொண்டுள்ள பொறுப்பைச் சரிவர நிறைவேற்றச் செய்வதும், மேலும் மேலும் அந்த நாடு சமாதான முயற்சியில், நியாயத்திற்குப் போராடச் செய்வதும் நம்முடைய பொறுப்பு. ஏகாதிபத்திய வல்லரசுகளின் ஆசைக்கோட்டைகள் தகரத் தகர, அடிமைநாட்டு சுதந்திரப் போரில் பொதுஜனங்கள் முன்னேற முன்னேற சர்வதேச ஸ்தாபனத்தை பலமான ஸ்தாபனமாக்க முடியும்.

# கட்சி நிதி வசூல்

## 11-6-45 தேதிவரை வசூல் தொகை ரூ. 16,959—2—3.

இரண்டு வாரங்களுக்கு முன்னல் ஜனசக்தியில் ரூ. 15,000 க்கு ¾ அணு குறைவு என்று போட்டிருந்தோம். மதுரையில் பொன்னகரத்தில் வீதியில் இட்லிவிற்கும் ஆறுமுகத்தம்மாள் அந்த வார ஜனசக்தியைக் கண்டதும், உடனே தன்னிடமிருந்த ¾ அணுவுக்கு ஒரு ஸ்டாம்பு வாங்கி அதைக் கவரில் வைத்து நமக்கு அனுப்பிவிட்டார். தொகை மிகவும் சொற்பமே. ஆயினும் அவருடைய ஆர்வத்தைப் பாருங்கள்! அந்தத் தமிழ் தாய் எழுதி அனுப்பியுள்ள கடிதம் இதோ!

"......நான் ஒரு விதவை. பிள்ளை குட்டிகள் இல்லாதவள். தினசரி இட்லிக்கடை வைத்து தெருவில் வியாபாரம் செய்பவள். ஆகையால் கம்யூனிஸ்டுக் கட்சிக்கு நான் செய்யக்கூடிய உதவியும் தேசபக்தியும் இவ்வளவுதான்.... தங்கள் கட்சியில் இவ்வளவு நம்பிக்கை ஏற்பட்டு இந்த ¾ அணுவை அனுப்புவதற்குக் காரணம் மதுரையில் விறகு நெருக்கடி ஏற்பட்ட காலத்தில் தங்கள் கட்சியாகிய கம்யூனிஸ்டு கட்சி மெம்பர்கள் மதுரை மகாஜனங்களுக்கும் எனக்கும் செய்த சேவை அபாரமான சேவை. நான் உயிருள்ளவரை மறக்கமுடியாத சேவை. நான் சாதாரணமாக ஜனசக்தி படிக்கும் மற்றவர்களிடத்தில் ஓசிவாங்கி படிக்கக்கூடியவள். இதைப் படித்ததும் எனக்கு வந்த ஆவல் இது. இதை ஏற்றுக்கொள்ளுங்கள்."

இப்படிக்கு தங்களன்புள்ள,
ஆறுமுகத்தம்மாள்

### காங்கிரஸ் தேசபக்தர்கள்

ஆயக்குடி: இங்கு நம் தோழர்கள் காங்கிரஸ் தேசபக்தர்களிடமே கட்சிநிதி வசூலுக்கு முதலில் சென்றனர். அணுகின அனைவரும் உதவினர். ஒரு காங்கிரஸ் தேசபக்தர் "நாம் அரசியல் அபிப்பிராயத்தில் ஒத்துப்போக முடியவில்லையானலும், நல்ல கட்சியெனப் புரிந்துகொண்டு ஜனங்களுக்கு சேவை செய்துகொண்டிருக்கும் கட்சிக்கு நான் கொடுக்கிறேன்" என்று தன்னிடமிருந்த ரூ. 2 ஐக் கொடுத்துதவினர்.

### தூங்காமல் வசூலித்தனர்

தஞ்சை: 29-5-45ந் தேதி தஞ்சையில் நகரசுத்தி தொழிலாளர் சங்கத் தோழர்கள் ஸ்குவாடாகச் சென்று உண்டியல் மூலம் ரூ. 11-3-0 கட்சி நிதிக்கு வசூலித்தனர். இந்தத் தோழர்கள் காலை 5 மணி முதல் மாலை 6 மணிவரை ரோடுகளில் கூட்டிவிட்டு, மாலை 7 மணி முதல் மறுநாள் காலை 6 மணிவரை—அன்று நடந்த புஷ்பபல்லக்கு திருவிழாவின்போது, உண்டியல்எடுத்து கட்சிநிதிவசூல் செய்விட்டு தூங்காமல், மறுநாள் மீண்டும் வேலைக்குச் சென்றனர். கம்யூனிஸ்டுக் கட்சியை தங்கள் கட்சியெனக் கொண்டுள்ள இவர்களின் உற்சாகத்திற்கு எல்லையேது?

இம்மாதிரி இன்னும் பல பல சம்பவங்கள்.

பொதுஜனங்களும், காங்கிரஸ், லீக் தேசபக்தர்களும் நிச்சயம் நம்மை ஆதரிப்பார்கள் என்று உறுதியுடன் வசூலில் இறங்கினல் நிச்சயம் நாம் ஜுலை 1ந் தேதிக்குள் ரூ. 25,000 கோட்டாவைப் பூர்த்தி செய்துவிட முடியும்.

சென்ற இதழ் ஜனசக்தியில் குறிப்பிட்டிருந்தபடி 3-6-45வரை மொத்த வசூல் ரூ. 16,356—5—0

இவ்வாரத்தில் 11-6-45ந் தேதிவரை

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| சென்னையிலிருந்து | 140 | 9 | 3 |
| கரட்டி (ராமநாதபுரம் ஜில்லா) | 5 | 0 | 0 |
| மா. கமிட்டிக்காரியாலயத் தோழர்கள் | 50 | 0 | 0 |
| தஞ்சை ஜில்லா கட்சி ஆர்கனைசர் | 100 | 0 | 0 |
| மாகாண மாணவ ஆர்கனைசர் | 30 | 0 | 0 |
| விழுப்புரம் | 25 | 0 | 0 |
| காஞ்சீவரம் | 20 | 0 | 0 |
| பனப்பாக்கம் (வட ஆர்காடு) | 4 | 8 | 0 |
| கோவை | 107 | 8 | 0 |
| தஞ்சாவூர் ஆர்கனைசர் | 55 | 4 | 0 |
| சிந்துபூந்துறை | 50 | 0 | 0 |
| மாணவ ஆர்கனைசர் | 15 | 0 | 0 |
| மொத்த வசூல்தொகை | 16,959 | 2 | 3 |
| இன்னும் வசூலிக்க வேண்டிய தொகை | 8,040 | 13 | 9 |

ஒவ்வொரு கட்சி யூனிட்டும் "தங்கள் கோட்டாவை நிறைவேற்றிவிட்டோமா" என்று கணக்குப் பார்க்கட்டும்.

எம். ஆர். வெங்கட்ராமன்

(முதற் பக்கத் தொடர்ச்சி)

எட்டையபுரத்தில் நடைபெறும். பல்லாயிரக் கணக்கில், தமிழர்கள் கூடுவார்கள். இவ் வருஷமே, தூத்துகுடியிலிருந்து செங்கொடி தாங்கிய இளைஞர்கள் கால் நடையாக நடந்து வந்தனர் பாரதிக்கு காணிக்கைச் செலுத்த.

பாரதி நிலையம் அடுத்த பாரதி தினத்துக்குள் கட்டி முடிந்து விடுமென்று எதிர்பார்க்கிரோம்.

அத்துடன், தமிழன் தன்னரசுக் கோயிலும் எழுமென்று நம்புகிரோம்.

சுதந்திர இந்தியாவில்தான், தமிழ் நாட்டு மக்கள் பாரதியின் கனவுகளை நடைமுறையில் நிறைவேற்ற முடியும். தமிழ்க் கல்வியும் தமிழ் நாட்டுப் பொருளாதாரமும் தழைத்தோங்க முடியும்.

* * *

பாரதி ஞாபகார்த்த நிலையம் அகில இந்திய க்ஷேத்திரமாகும் நாள் தூரத்திலில்லை. தேசபக்தி மிகுந்த நமது சகோதர மக்கள்—வங்காளிகள், மராத்தியர்கள் முதலியோர்—நமது புரட்சிக் கவியின் பிறப்பிடம் தேடி வருவார்களென்பது உறுதி.

இந்தியாவின் மூன்று கண்கள் பாரதி, இக்பால், தாகூர். சுதந்திர இந்தியா அவர்களை கௌரவிக்கும்.

பர்மா

# தேசபக்தர்கள் ஐக்ய முன்னணி

## அதை உடைக்க ஏகாதிபத்திய சதி

பர்மா விடுதலை அடைந்தது. பத்திரிகைகளைப் படித்தால் இந்த விடுதலையில் பிரிட்டிஷ்—இந்திய இராணுவம்தான் எல்லாவற்றையும் செய்துவிட்டதுபோலத் தோன்றும். பர்மாவிலும் தேசத்தின் விடுதலைக்காக சிலர் கொரில்லாப் போர் செய்த கதையும், கிளர்ச்சிசெய்த விஷயமும் ஏதோ சில சமயங்களில் தான் வெளியாகி இருக்கின்றன. பர்மியர் பட்ட கஷ்டங்கள் பல. மூன்று வருஷ காலத்தில் அவர்கள் தங்கள் தேசிய உணர்ச்சியைப் பெருக்கிக்கொண்டு தேசபக்தி ததும்பும் தேசிய அணியை உருவாக்கி இருக்கின்றனர். ஆனால் இதை மறைப்பதற்காக சில ஏகாதிபத்தியவாதிகள் "சமீபத்தில் பர்மியர் ஏதாவது உதவி செய்திருந்தால் அது அகஸ்மாத்தான சம்பவம்; அவர்களும் ஜப்பானியர் மாதிரிதான்; அவர்கள் ஜனங்களை ஹிம்சித்து வளர்ந்தவர்கள், அவர்களிடமுள்ள ஆயுதங்களைப் பிடுங்கிவிட வேண்டுமென்று ஜனங்களே விரும்புகிறார்கள்; மாண்டலேயில் நாம் தோல்வியடைந்திருந்தால் அவர்கள் ஜப்பானியரை ஆதரித்திருப்பார்கள்" என்று ஒரு ஏகாதிபத்தியக்கட்டை கூறினாராம்! இது சுத்தப் பொய். எப்படி என்று பார்ப்போம்

பர்மா தேசிய அணிவகுப்புக்கு பாஸிஸ்ட்—எதிர்ப்பு கூட்டணி என்று பெயர். 50,000 பேர் கொண்ட அரசியல் ஸ்தாபனம். ஜப்பானியர் ஸ்தாபித்த பர்மா பாதுகாப்பு சைனியத்திலிருந்து 10,000 பேர் அதில் சேர்ந்திருக்கிறார்கள். அரக்கான் கொரில்லா இயக்கமும் அதில் சேர்ந்துள்ளது. அரக்கான் இயக்கத்தின் தலைவர் தான் யு பின்யாத்திஹா. அரக்கானியர்களைத் தவிர, கெரென், ஷான், மாகாணத்தவர்களும் இந்த ஐக்கிய அணியில் சேர்ந்திருக்கிறார்கள்.

### கட்சிகள்

பழைய பர்மாவில் யூஸா தலைமையில் ஒரு தேசியக் கட்சியும், பாமா தலைமையில் "பாமரர்" கட்சியும் இருந்தன. யூஸா சர்ச்சிலைப் பார்த்துப்பேசி டொமினியன் அந்தஸ்துக் கேட்டார். பாதுகாப்பில் அடைக்கப்பட்டார். பாமா அதற்கு முன்னாலேயே ஜெயிலில் அடைக்கப்பட்டிருந்தார். அங்கிருந்து தப்பியோடி ஜப்பானியர் வந்தவுடன் திரும்பி வந்தார். இருகட்சியினரும் பதவி வேட்டைக்காரர்கள்.

இன்னொரு தேசிய ஸ்தாபனம் இருந்தது. அதில் ஒரு பகுதியின் தலைவர் ஆங்ஸான். இவர் டோக்கியோவுக்குப் போய் பண உதவி பெற்றுவந்தார். ஜப்பானியருக்கு உதவி அளித்தது இவருடைய கோஷ்டி.

இன்னொரு பகுதியின் தலைவர் தாகின்ஸோ. அவர் பிரசித்திபெற்ற மார்க்ஸிஸ்ட். ஆரம்பத்திலிருந்தே ஜப்பானை எதிர்த்து வந்தார். அவர்களை பிரிட்டிஷ் அதிகாரிகள் சிறையிலடைத்து வந்திருந்தார்கள். ஜப்பானியர் வரும் சமயத்தில் சிறைக் கதவுகளை உடைத்துக்கொண்டு தப்பித்து ஓடினார்கள்.

1942 மார்ச்சு மாதத்தில் சியாங்கே ஷேக்கின் சொந்தப் பிரதிநிதியாக ஜெனரல் பி. எஸ். வாங் என்பவர் பர்மா வந்தார். தாகின்ஸோவையும் மற்ற கம்யூனிஸ்டுகளையும் பார்த்துப் பேசினார். ஜப்பானிய எதிர்ப்புக்கு அவர்கள் உதவியை நாடினார்.

### ஜப்பானியர் தந்திரம்

ஜப்பானியர் பாமாவின் உதவியைக்கொண்டு தங்களுக்கு ஆதரவு தேடப் பார்த்தனர். ஜூன் 1942ல் ஒரு தாற்காலீக சர்க்கார் அமைக்கப்பட்டது. அதில் பாமா பிரதமர். தாக்கின் கட்சிக்கு அந்த சர்க்காரில் சரிபாதி பிரதிநிதித்வம் தந்தனர். அவர்களுடைய கட்சி ஒன்றுமட்டும் சட்டபூர்வமானது. மற்ற கட்சிகளுக்கு இடமில்லை. "இராணுவம் திரட்டுவோம். செட்டியார் நிலங்களைப் பறிமுதல் செய்து பங்கிடுவோம். டெக்னிகல், கல்வி வசதிகளை ஏற்படுத்துவோம்" என்றெல்லாம் கூறி, ஜப்பானுக்கு ஆதரவு தேடினார்கள். ஒருமாதத்தில் 2 லக்ஷம் அங்கத்தினர்களைத் திரட்டினார்கள்.

### பாஸிஸ்ட் எதிர்ப்பு

ஆனால் பாஸிஸ்ட் எதிர்ப்பு வீரர்கள் வேலை செய்யாமலில்லை. வாலிபர்களைத் திரட்டி "வாலிபர் கழகங்கள்" அமைத்தனர். பர்மியப் பாதுகாப்புக்காக என்றார்கள். பாமா இதுவும் ஒரு பிரிட்டிஷ் எதிர்ப்பு ஸ்தாபனமாகும் என்று எண்ணினார். இதிலிருந்து பர்மியப் பாதுகாப்புப் படைக்கு ஆட்களைத் திரட்டினார்கள்.

பாமா சர்க்காரில் ஆங்ஸான் பாதுகாப்பு மந்திரி. தாகின்ஸோ தலைமறைவாயிருக்க வேண்டியிருந்தது. வெளிப்படையாக வருவதில் பேராபத்து இருந்தபோதிலும் அவர் ஆங்ஸானைப் போய்ப் பார்த்தார். ஜப்பானிய எதிர்ப்புப் பிரசாரத்தை பர்மா பாதுகாப்புப் படையில் பரப்ப வழி தேடினர். ஆங்ஸான் உள்ளத்திலும் தேசபக்திச் சுடர் அணையாதிருந்தது. தாய்நாட்டின் விடுதலைக்கு ஜப்பானியரை விரட்ட வேண்டுமென்பதை உணர்ந்தான். பாதுகாப்பு மந்திரிப் பதவியை ஜப்பானிய எதிர்ப்பு வீரர்களைக் காக்க உபயோகப் படுத்தினார்.

"பர்மிய பாதுகாப்புப் படை வீரர்கள் என்னுடைய சொந்த அனுமதியின்றி ஜப்பானியரால் சோதனை செய்யப்படக்கூடாது" என்று உத்திரவு போட்டார்.

பர்மா பாதுகாப்புப் படையில் தேசிய சர்வதேசிய நிலைமை பற்றிப் பிரசாரம் நடந்தது. பர்மாவை ஆள பர்மியர் என்ன செய்யவேண்டுமென்பதுபற்றி பிரசாரம் நடந்தது. "பர்மா பாதுகாப்புப்படை"—"பர்மிய விடுதலைப் பட்டாள"மாக மாறிற்று.

நவம்பர் 1944ல் ஆங்ஸான் "அவசரப்பட்டு கலகம் செய்யாதீர்கள்" என்று எச்சரிக்கை செய்தார். அது அவருடைய வழவழா தனத்தைக் காண்பித்தது.

### போர் தொடங்கிற்று

ஆனால் பர்மா பாதுகாப்புப் படைத் தலைவர்கள் ஆங்ஸானைப் போல் தயங்கவில்லை. பிரிட்டிஷ் 19-வது படை மாண்டலே நகருக்கருகே வந்ததும் மாண்டலேயிலிருந்த பர்மா பாதுகாப்புப் படை ஜாப் அட்வைஸரில் ஒருவனைக் கொன்று, கொரில்லாப் போர் ஆரம்பித்துவிட்டது. அருகாமையிலுள்ள கிராமங்களுக்குச் சென்று விவசாயிகளைத் திரட்டினார்கள். கிராமவாசிகளிடமிருந்து ஜப்பானியர் நடமாட்டத்தைத் தெரிந்துக்கொண்டனர்; அவர்களுடைய உதவியுடன் ஜப்பானியரை ஹிம்சித்தனர்.

அரக்கான், மத்திய பர்மா, டாங்கூ வட்டாரங்களில் கொரில்லாக்கள் அளித்த உதவியை ஸியாக் (தென் கிழக்கு ஆசிய போர் ஸ்தாபனம்) அறிக்கையே ஒப்புக்கொண்டிருக்கிறது.

### வீரச் செயல்கள்

கை அறிவாளால் ஜப்பானிய காப்டன் ஒருவனை ஒரு கிராமவாசிகள் கொன்றனர். இன்னொரு ஊரில் 15 வயது பையன் ஜாப் லெப்டினன்டைக் கொன்றான், முதியோர் 3 ஸோல்ஜர்களைக் கொன்றனர். பிரிட்டிஷ் பாரசூட்டுப் படைகள் இறங்கியபொழுது ஜனங்கள் ஜப்பானியர் தங்கியிருந்த முகாம்களைத் தாக்கினார்கள்.

டாங்கூ போன்ற இடங்களில் நேசப்படைகள் வருவதற்கு முன்னமேயே கொரில்லாக்களுக்கு உதவி புரிந்து நகரவாசிகள் ஜப்பானியரை விரட்டினார்கள். "ஸ்டேட்ஸ்மன்" பத்திரிகை நிருபர் 20-5-45ல் எழுதுகிறார். 'நகரவாசிகள் கலகம் செய்வார்கள் என்று பயந்தே ஜப்பானியர் ரங்கூனைக் காலி செய்திருக்கக் கூடும். பல வாரங்களுக்கு முன்னரே எல்லா ஜப்பானியரும் ஆயுதந்தாங்கி நடமாட ஆரம்பித்தனர்"

பாமா 1943ல் பர்மா சுதந்திர அறிக்கையைக் கொண்டுவந்து பர்மியர் விழிப்பை ஜப்பானியருக்கு சாதகமாக உபயோகிக்கப் பார்த்தார். புதிய ஸ்தாபனம் ஒன்றை ஆரம்பித்தார். அதிலும் பாஸிஸ்ட் எதிர்ப்பு வீரர்கள் புகுந்து வளர்ந்தனர்.

### ஒற்றுமை

பர்மிய தேசிய அணிவகுப்பின் திட்டம் பர்மாவிலுள்ள கெரெனியர்கள், ஷான் சமஸ்தானத்தவர்கள், முதலியவர்களுக்குச் சுதந்திரம் அளிக்கும் திட்டத்தின் அடிப்படையில் உருவாயிருக்கிறது. முன்பு தாகின் கலகம், கெரெனியர் கலகம், ஷான் சமஸ்தானக் கலகம் என்றெல்லாம் சண்டை. இன்றைக்கு இந்தப் பகுதிகள் பல ஒன்றுயத் திரண்டுள்ளன.

இந்த அணியின் பிரதிநிதி தின்பீ 1942 லிருந்து இந்தியாவில் இருக்கிறார் நீண்ட நாள் சந்தேகப்பட்டு, அதன் பின்னர்தான் 1944 செப்டம்பரில் இந்த பர்மா தேசிய அணியை பிரிட்டிஷ் இராணுவம் அங்கீகரித்து உதவிற்று.

இன்றைய நிலைமை என்ன? சிம்லாவில் உட்கார்ந்திருந்த டார்மன் ஸ்மித் சர்க்கார், பிரிட்[illegible] எதிர்ப்பு மனப்பான்மை கொண்டவர்களைத்தண்டிக்க 'லிஸ்ட்' போட்டுவிட்டது. அன்றைய ஏகாதிபத்திய எதிரிகள் பலர் இன்றைய விடுதலை இயக்கத்தின் தலைவர்கள். பர்மாவில் ஏற்படும் இராணுவ ஆட்சியின் சிவில் அதிகாரிகள் இந்த தேசபக்தர்கள் பலரைப் பிடித்துச் சிறையிலடைத்துவருகிறார்கள். இது மிகவும் சீர்கேடான நடவடிக்கை. பர்மிய தேசிய அணியை உடைப்பதற்கு நடைபெறும் முயற்சி.

—பீப்பிள்ஸ்வார்.

பர்மா தேசபக்தர்கள்; யுத்தத்திற்குமுன்பு ரங்கூன் சர்வகலாசாலையில் படித்துக்கொண்டிருந்த மாணவர்கள்; இப்பொழுது ஒவ்வொருவரும் ஒவ்வொரு ஜில்லாவில் பொதுஜனத் தலைவர். ஜப்பானியரை எதிர்த்து, "பர்மா பாதுகாப்புப்படையில் உழைத்து, கடைசியாக கொரில்லா சண்டை செய்தனர்; ஜப்பானியரை விரட்ட பேருதவி செய்திருக்கிறார்கள். அநேகர் கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர்கள்.

ஆரம்பத்தில் ஜப்பானியர் சுதந்திரம் தருவார்கள் என்று நம்பினார்கள். ஆனால் அது வெறும் மோசடியாக இருந்ததைத் தங்கள் கண்களாலேயே பார்த்தனர்; அனுபவித்தனர். ஜப்பானியரை விரட்ட கங்கணம் கட்டினர்.

இவர்கள் ஜப்பானிய ஆட்சியை வெறுக்கிறார்கள்; பிரிட்டிஷ் ஆட்சியையும் விரும்பவில்லை. சுதந்திரம் வேண்டுமென்கிறார்கள்.

அரக்கான் தேசபக்தர்கள். பின் வரிசையில் நிற்கும் புத்த பிக்ஷுவின் பெயர் பின்யாத்திஹா. இவர்தான் ஜனங்களின் தலைவர் இப்படத்திலுள்ள மற்றவர். விவசாயிகளாயும், மாணவர்களாகவும் இருந்தவர்கள். ஜப்பானியரை எதிர்த்து கொரில்லாப் படைகளை நடத்திச் சென்றனர். அ. இ. கிசான் மகாநாட்டில். இவர்களில் சிலர் கலந்துகொண்டு, வாழ்த்துக் கூறினார்கள்.

# சோவியத் விஞ்ஞான கழகம்

## ஸி. வி. ராமனுக்கு புகழ்மாலை

"தலை சிறந்த இந்திய விஞ்ஞானியான ஸர். ஸி. வி. ராமனிடம் எங்களுக்கு பரிச்சய முண்டு. சோவியத் விஞ்ஞானிகளுக்கு அவரிடம் அளவு கடந்த மதிப்பு" என்று சோவியத் யூனியனின் விஞ்ஞான கழகத்தின் உபதலைவர் பேராசிரியர் ஜோப் எழுதுகிறார்.

ஒளியைப் பற்றி ஸி. வி. ராமன் கண்டுபிடித்த புதிய உண்மைகளைப் பற்றி சோவியத் விஞ்ஞானிகள் ஆராய்ச்சிகள் நடத்துவதாகவும், அதை யுத்த முயற்சிகளில் பயன்படுத்திக் கொண்டிருப்பதாகவும் அவர் கூறுகிறார்.

"ராமன் கழகத்தின் சாதனைகளை நாங்கள் நுணுக்கமாக படித்தறிகிறோம். ராமன் சிஷ்யர்களில் பலர் பெயர் எங்களுக்கு நன்கு தெரியும்" என்று ஜோப் கூறுகிறார்.

நோபல் பரிசு பெற்ற ராமனின் புத்தகங்களும் இந்திய விஞ்ஞான கழகத்தின் சஞ்சிகைகளும் ஒவ்வொரு ஆராய்ச்சிக் கழக நூல் நிலையத்திலும் வைத்திருப்பதாக அவர் கூறுகிறார்.

தமிழ் நாட்டின் விஞ்ஞானி ஸர். ஸி. வி. ராமனை விஞ்ஞான மேதைகள் நிறைந்த சோவியத் யூனியன் போற்றிப் புகழ்வதைக் கேட்டு எந்த தமிழன் உள்ளம்தான் குளிராமலிருக்க முடியும்?

சோவியத் விஞ்ஞான கழகம் சோவியத் யூனியன் விஞ்ஞானிகளின் பிரதம ஸ்தாபனம். அதன் 220-ம் வருஷக் கொண்டாட்டம் இம்மாதம் 15-ந் தேதி மாஸ்கோவிலும், 20-ந் தேதி லெனின் கிராடிலும் நடைபெறுகிறது, அந்த திருவிழாவில் கலந்துகொள்ள வேண்டுமென்று ராமனுக்கு அழைப்பு வந்தது. ஆனால் அவரால் போக இயலவில்லை.

சோவியத் விஞ்ஞான விழாவில் சர்வதேச விஞ்ஞான மேதைகளனைவரும் கலந்து கொள்கிறார்கள். பிரிட்டனிலிருந்து ஹால்டேன்முதலியோர் போகிறார்கள். சீனாவிலிருந்து டிங்-ஷு-லிங், கூ-மு-ஜோ என்ற இரு விஞ்ஞான விற்பன்னர்களும் செல்கிறார்கள்.

இந்தியாவிலிருந்து கல்கத்தா சர்வகலாசாலை பேராசிரியர் மேக்னாத் ஸாஹா போயிருக்கிறார். டெஹ்ரானில் சோவியத் விமானம் தயாராகவிருப்பதாக செய்தி வந்திருக்கிறது.

சோவியத் விஞ்ஞான கழகத்தின் தலைவர், உலகப் பிரசித்தி பெற்ற கோமரோவ், வயது 76. அவர் தன்னுடைய வாழ் நாளில் 50 வருஷ காலம் விஞ்ஞான ஆராய்ச்சிகளில் செலவழித்திருக்கிறார். ஜாராட்சியில் அவருக்கு பல தடைகள் இருந்தன, புரட்சிக்கு பிறகு, அவருக்கு பல வசதிகள் கிடைத்தன. 50 வகை செடிகளை அவர் புதிதாக கண்டுபிடித்திருக்கிறார். அவைகளுக்கு அவர் பெயரே வழங்கப்பட்டிருக்கிறது. தாவர சாஸ்திர ஞானி. ஹிட்லர் சோவியத் மீது படையெடுத்தபோது, ஹிட்லரிஸத்தை அழிப்பதில் உலக விஞ்ஞானிகள் ஒன்றுபட வேண்டுமென்று அவர் கேட்டுக்கொண்டார்.

இவரைப்போல, இன்னும் பல மேதைகள் சோவியத் நாட்டிலிருக்கின்றனர்.

(6-ம் பக்க தொடர்ச்சி)

முதல் செய்ய முயற்சி செய்கிறது இந்த நிர்வாகம்.

### சேம்பர்லேன் பரம்பரை

இந்தத் தாக்குதல், இந்தியத் தொழிற் சங்க இயக்கத்தின்மீது ஆரம்பித்த தாக்குதலாகும். ஜனநாயகத்தின்மீது ஆரம்பிக்கப் பட்டுள்ள நாஜித் தாக்குதலாகும், சுதந்திரப் பிரிய இந்திய மக்களின்மீது, ஒரு பிரிட்டிஷ் முதலாளியால் ஆரம்பிக்கப்பட்டுள்ள தாக்குதலாகும்.—ஏன், நாஜிஸத்தை வீழ்த்தி, புதிய ஜனநாயகத்தை அடிப்படையாகக் கொண்டு முன்னேறும், உலகத்து முற்போக்கு சக்திகளின்மீது துவக்கப்பட்டுள்ள தாக்குதலாகும். ஹிட்லருடைய சகாக்கள்,-சேம்பர்லேனின் மச்சான்மார்கள்—ஒவ்வொரு நாட்டிலும் இருக்கின்றனரல்லவா? அவர்கள் பரம்பரையைச்சேர்ந்ததே இந்த நிர்வாகமும்.

எனவே, இந்தியத் தொழிற் சங்க இயக்கம் இந்தத் தாக்குதலை முறியடித்தாகவேண்டும். பொதுமக்கள் இந்த சவாலை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

இந்தியத் தொழிலாளி வர்க்கம், ஸ்தாபன ரீதியாகக் கட்டுப்பாட்டுடன் நடத்தும் கிளர்ச்சியில் பொதுமக்களை ஒன்று திரட்ட வேண்டும். நம்முடைய சக்தியைக் கொண்டு, இந்த நாஜி அடக்கு முறையை அனுமதித்து, மறைமுகமாக ஆதரவு கொடுத்து வரும் அதிகாரவர்க்கத்தை, இக்கொள்கையைக் கை விடும்படி நிர்ப்பந்திப்போம். தொழிலாளர்சக்தியின் முன்னே, விழித்தெழுந்துள்ள தொழிலாளர் சக்தியின் முன்னே, குட்டி ஹிட்லர்களின் தர்பார்கள் சடசடவென்று முறிந்து வீழ்வது திண்ணம்.

(3-ம் பக்க தொடர்ச்சி)

களைக் கொண்டுவந்து கொடுத்தார்கள். சாப்பாட்டிற்குக் காய்கறிகள், பால், தயிர், அரிசி, விறகு, முதலியவையும், மண்பாண்டத் தொழிலாளரிடமிருந்து மண் டம்ளர்களும், பந்தலுக்கு தென்னைமட்டைகள், மூங்கில்கள் முதலியனவும் விவசாயிகளிடமிருந்து வந்து குவிந்தன. அதும[illegible]மல்ல, மகாநாடு நடைபெற்ற இட[illegible] மூலப்பாளையத்திலிருக்கிறது. பள்ளமும், மேடும், கல்லும் காடும், புல்லும் பூண்டும் நிறைந்த இடம். அங்குள்ள விவசாயிகள் அந்த இடத்தை அழகிய நகரமாக மாற்றினார்கள். "காடு வெட்டி மலையுடைத்துக் கட்டடங்கள் எழுப்புவோம்" என்ற சர்வதேச கீதத்தின் அடி நினைவிற்கு வந்தது.

இதில் ரெயில்வே காங்கித் தொழிலாளர்களின் உதவியும், சேவையும் போற்றத் தக்கது. ரெயில்வேத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் அவர்கள், தங்கள் சகோதரர்களாகிய விவசாயிகளின் உதவிக்கு வந்தனர். அவர்கள் ஆளுக்கு ஒரு படி அரிசி வீதம் 160 படி அரிசி கொடுத்ததோடு, மகாநாட்டு வேலைகளில் முக்கியப் பங்கெடுத்துக்கொண்டனர். மகாநாட்டை வாழ்த்திய, தென் இந்திய ரயில்வே தொழிற்சங்கத்தின் காரியதரிசி தோழர் அனந்த நம்பியார், "தொழிலாளர்களாகிய நாங்களும், விவசாயிகளாகிய நீங்களும் ஒன்றாகச் சேர்ந்து, இச் செங்கொடியைத் தாங்கி, அடிமைத்தனத்தை ஒழிப்போம்" என்றது முற்றிலும் உண்மை என்பதை, இம் மகாநாடு நிதர்சனமாகக் காட்டிற்று.

(க. கி.)

Edited, Printed and Published by P. RAMAMURTHI at the "Janasakthi" Press 1/6, Davidson Street, G. T. Madras. Regd. No. M. 4514